227


"Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith."

"Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End."

ஸத்யம்வத,—**Speak the Truth.**

**"Hitch Your Wagon to a Star."** **"To Thine Own Self be True."**




அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம்தத்ஸத்.] உ [God is Love: Knowledge is Power. *Om*·

ஸத்யமேஜெயம்.—**Satyameva Jayati.**

புத்தகம் **16.**] **1908-ஷ ஜூன்மீ** [சஞ்சிகை **8**


## * "THE ETHICS OF PASSIVE RESISTANCE."

## "எதிர்க்காமல் எதிர்த்தல்."

"None lives but he who feels for the poor, the ignorant and the down-trodden; feels till the heart stops, the brain reels and he thinks he will go mad—then will come help, power and indomitable energy"—*The Swami Vivekananda.*

### ஸ்ரீ கிருஷ்ணபகவான் வாக்கு.

"தண்டிப்பார் தண்டமும்நான் தக்கவயம் [வேண்டுமவர்
கொண்டதொரு நீதியும்நான் கூறரிதென்— [றென்றும்
மறைப்பவற்றுள் மௌனம்யான் ஞானறிஞர் [பெற்ற
சிறப்புடைய ஞானமும்நான் தேர்."—

ஸ்ரீபகவத்கீதைவெண்பா, X 38.

### ஸ்ரீ மஹாவிஷ்ணு பூமிதேவிக்குக்கூறல்.

"கீதைதனை ஓதுமிடம் கிட்டும் துணைவிரைவில்
ஏதமறக் கற்றுக்கற் பிக்கவரும்—நாதம்அது
கேட்குமிடம் எல்லாமே கேளாய் புவியணங்கே
நீக்கமற நானிருப்பேன் நின்று."-வராகபுராணம்.

"சொல்லாமற் சொல்லலும், கேளாமற்கேட்டலும்" தீக்ஷை பெற்றவர்களுக்குத் தானே வந்தமையுமென்று சென்ற சஞ்சிகையில் "லலிதாலயம்" என்னும் தலைப்பின்கீழ் எழுதிய விஷயத்தின் இடையே ஒருவாறு குறிப்பிட்டோம். அதில் ஒரு நுட்பமான தர்மவிதி யடங்கியிருக்கிறது. அதை யுணர்ந்தாலன்றி அந்த நுட்ப தத்துவத்தால் உண்டாகும் நடத்தைகளை யறிதல் முடியாது. "சொல்லாமற் சொல்வது" எப்படி? இவன் உண்மையுணராத மூடனாயிருக்கையில் தனது ஆனந்தத்தாயிடம் உண்மை யுபதேசம் பெற்றுவருகையில், அவள், "வாக்கு மனது இந்திரியங்கள் முதலியன துவும்நானல்ல; அவை நான் குடியிருக்கும் வீட்டின் பலகணிகள் போன்றவை. அவை நான் பார்ப்பதற்காக எற்பட்ட வழிகள்: என்னையன்றி அவற்

* See Prize Essay by Mr. M. S. Maurice, published in the "Indian Opinion,"

றிற்குப்பார்க்கவும் கேட்கவும் பேசவும் சக்தியில்லை. நான் அகண்டாகாரமாய், ஆனந்தமயமாயிருக்கிறேன்." என்று அடித்தடித்துப் போதிப்பள். அப்பொழுது அவள் அதீதவார்த்தைகள் ஒன்றும் எனக்கு ஏறாமல் நான் தவித்துத் தத்தளித்ததுண்டு. பின்னர், "மௌனகுருதரிசன"மாகி அவர் மகிமையைக்கண்டு அதிசயித்துநின்று அந்தஅதிசயம் திரிசயமாகத் தோன்றத்துவக்கினபின் "காணாமற்காணல்" என்றால் இன்னதென்று தெரியவந்தது. என் தாய் எனக்கு போதித்த உண்மைப் போதங்கள் முதலில் மனத்திலேறாமல் நின்று, பிறகு குருதரிசன மகிமையால் ஹிருதயசுத்தி வாய்த்தபின், என் உள்ளத்திலிருந்தே அவ்வுண்மைப்போதங்கள் அசரீரிவாக்காக் கிளம்பக் கண்டபின், "பேசாமற்பேசல்" அல்லது "சொல்லாமற்சொல்லல்" என்பதின் உள்மர்மம் விளங்கியது. அவ்வுண்மைப் போதங்கள் உள்ளத்திலிருந்து எழுந்ததன்றி "நாதம்" என்று சொல்லும் சப்தஸ்வரூபமாக சுரோத்திரத்துக்கு விஷயமானது கண்டு "கேளாமற்கேட்டல்" என்பதின் உள்மர்மம் உள்ளபடி யின்னதென்று உணர்ந்துகொண்டேன்.

பஹிர்முகமாகவுள்ள வியவஹாரதெசையில் நடக்கும் பிரபஞ்ச நாடகத்தைப் போலவே, இதற்குக் காரணமான உட்பிரபஞ்சமொன்றிருக்கிறது. "அறையிலாடி அம்பலத்தாடுவதுபோல" எதுவும் அந்த சூக்ஷ்மமான உட்பிரபஞ்சத்தில் "அறையிலாடி," அப்புறம் தான் வெளிப்பிரபஞ்சமான "அம்பலத்திலாட"த் துவக்குகிறது. இது அனுபவரீதியாக பிரத்தியக்ஷ சாக்ஷாத்காரமாயறிந்துக்கொள்ளக்கூடிய ஒரு உண்மை. இது சித்தசுத்திவாய்த்தவர்களுக்கேயன்றி மனத்தழுக்கு நிறைந்தவர்களுக்குச் சரியாய் விளங்குகிறதில்லை. சித்தசுத்தி வாய்ந்து தீக்ஷை பெற்றவர்கள் அந்தர்முகமாக உட்பிரபஞ்சத்தில் தத்துவாராய்ச்சி செய்து உண்மை யுணர்ந்து தேறத்தேற அவர்களுக்குக் கேளாமற்கேட்டல், சொல்லாமற்சொல்லல், காணாமற்காணல், நினையாமல் நினைத்தல் முதலிய சித்திகளுண்டாகின்றன. இதில் மிகவும் கூடமான மர்மம் என்னவென்றால், எவனொருவன் ஆத்மானுசந்தனாகி, அஹம்பாவமற்றிருக்கிறானோ, அவன் ஈசுவரசாக்ஷியைக் கண்டு களிக்கிறான். மனச்சாக்ஷியைப்போல் ஈசுவரசாக்ஷியைக்கண்டுகளிக்கும் பாக்கியம் பெற்றவன் ஈசுவரோபாஸனை மகிமையால் ஈசுவரப்பிரஸாதத்துக்குப் பாத்திரனாகிறான். அவன் கேவலம் எண்சாணுடலி லடைபட்ட பெத்தஜீவனும் மனிதனாகவின்றி, "மண்ணும் விண்ணும் ஒண்ணாய் அளாவி நிற்கும் ஜீவராசிகளெல்லாம் வசிப்பதற்கிடமான" விராட்ரூபியாகிறான். அப்பொழுது அவனுடைய தேக மனதி இந்திரியங்கள் ஈசுவரசாக்ஷியின் சந்நிதானத்தில் வசிக்கும் மகிமையால், ஈசுவரசங்கற்பம் இன்னதென்றுணர்ந்து நடக்கும் சூக்ஷ்மசக்திவாய்ந்தவனாகின்றான். ஆகையாற்றான் எக்காலத்திலும் எத்தேசத்திலும் அப்படிப்பட்ட பதவி பெற்றவர்களை தெய்வீகமாக மதித்துக்கொண்டாடுகிறார்கள்.

இந்த தெய்வீகசக்தி வாய்ந்தவர்கள் எல்லா தேசங்களிலும் எல்லாக் காலங்களிலுமிருந்திருக்கிறார்கள். இப்பொழுதும், எப்பொழுதும் போல், அங்கங்கேயிருந்து தெய்வாராதனை செய்து தெய்வ சங்கல்பத்தை யொட்டி நடந்து வருகிறார்கள். இவர்கள் சுத்தப்பிராஞ்ஞர்களாய் உட்சாட்சியன்றி வேறு அதிகாரத்துக் குட்படாதவர்களாய், தன்னிச்சை யென்பதின்றி, பரனிச்சை வழிப்பட்டு, "சித்தன்போக்கு, சிவன்போக்கு" என்கிற வசனத்துக் கிலக்காய்ப் பரோபகாரார்த்தமாகவே எல்லாம்செய்துவருகிறவர்களாயிருப்பதால், இவர்கள் பரோபகாரார்த்தமாகவே, இராஜ்ஜியத்தில் அக்கிரம அநீதிகள் தலையெடுத்து ஆடினால், அவற்றை எதிர்த்துநின்று, அவ்வித அக்கிரம அநீதிகள் செய்யும் அதிகாரத்தின் சீரைக் குலைக்கக் கடமைப்பட்டவர்களாகவிருக்கிறார்கள். ஆனால் இவர்கள் நிக்ஷேபாஸனை காலத்தில் எதையும் எதிர்ப்பதில்லையென்கிற விரதம் கொண்டுழை

த்தவாசனைக்காரணத்தாலும், பிந்தி சாக்ஷாத்காரானுபவம் பெற்றபொழுது கிரமம் அக்கிரமம், நியாயாநியாயம் என்கிற துவந்தமற்று ஏகமாய் நிற்கக்கண்டவர்களான காரணத்தினலும், அக்கிரமத்தை யெதிர்க்க இவர்கள் பலாத்காரமாய் ஒன்றும் செய்வதில்லை. வெளிப்பிரபஞ்சமயமான ஜடசக்திஉட்பிரபஞ்சமயமான சித்சக்தியின் அவித்தியாப்ரதிபிம்பமேயன்றி வேறல்லவென்பது இவர்களுடைய ஸ்வானுபவமாகையாலும், "தேஹம் நான்" என்கிற பாவனையை முற்றும் விட்டு "தெய்வீகமான பரிபூரண ஆத்மா நான்" என்கிற பாவனைதடித்து அப்படியே அனுபவமும் இருக்கக் கண்டவர்களாதலால், இவர்கள் இராஜ்யாதிகாரிகள் அக்கிரமங்கள் செய்து அந்தஅக்கிரமங்கள் ஆத்மானுபவத்துக்கு மாருகவுமிருக்கும்பக்ஷத்தில், "பொய்யைத் தள்ளிமெய்யைத்தழுவு" என்னும் மூதுரையையனுசரித்து மனுஷ்ய கற்பனையான தப்பு விதிகளை விலக்கி, ஈசுவரகற்பனையான உண்மை விதிகளை யனுசரித்துக்காட்டுவார்.

"ஈசுவரகற்பனை"யென்று நாம் சொன்னதெதுவோ, அதுவே "பிரகிருதி தர்மம்" என்பதும். இவர்கள் பிரகிருதி தர்மத்தை ஸ்தர்பிக்கச் செய்யும் சூழ்ச்சி யெதுவோ அதற்குத்தான் "எதிர்க்காமல் எதிர்த்தல்" என்று சொல்கிறது. எதிர்க்காம லெதிர்த்தலாவது பொய்யான மூர்க்கபலத்தைக் கொண்டு பொய்யானதோர் சட்டத்தைக் கற்பித்து அதனல் பிரஜைகள் சித்தத்தைக் கலக்கி வசப்படுத்தப்பார்க்கும் லௌகிக அதிகாரிகள் இடும்பை இவர்களிடத்தில் செல்லாது போகச் செய்யல். ஏனென்றல் லௌகிக அதிகாரிகள் ஆஞ்ஞைக்கு இவர்கள் உட்பட்டவர்களல்லர். லௌகிகஅதிகாரிகளுடைய அதிகாரவரம்பு தேஹமட்டும்தான் செல்லுமேயன்றி, தேஹியைப் பாதிக்காது. தேஹபாவனையற்று தேஹி ரூபமாய் நித்தியவாழ்வு பெற்றவர்களை இகலோக அதிகாரிகள் என்ன செய்யக்கூடும்? அவர்கள் தேஹத்தை வதைத்து ஹிம்ஸிக்கலாம். மிஞ்சிப்போனல் அவர்கள் உயிரையும் வாங்கலாம். தேஹஹிம்ஸையும் மரணமும் அவர்களுக்குண்மையில்இல்லாமையால் இவ்விரண்டையும் அவர்கள் ஸ்வப்பனத்திலும் கருதுகிறதில்லை. ஆதலால் இவை அவர்களைப் பாதிக்காது. இவ்வதிகாரிகள் செய்யும் கொடுமை சர்மவிதிப்படி இவர்களையே வந்து பாதிக்கிறது. ஜனங்கள், உண்மைக்காக ஒருவன் உயிரையும் திரணமாகவெண்ணி "ஸத்தியமே ஜயம்" என்று மரணத்துக்கும் உள்ளாவதைக்காணும்பொழுது, அவர்கள் ஆத்மஸ்வரூபிகளாகவிருக்கும் காரணத்தினல், அந்த க்ஷணம் அவர்கள் தங்களுடைய தேஹமனோவாசனைகளைக் கடந்து உள்ளத்துதித்தெழும் உண்மைப் பிரகாசத்தினல் குதூஹல மடைந்தவர்களாய், அத்தனைபேர்களும் ஒரேகாலத்தில் தங்களையறியாமற்றனே பொய்யைத்தள்ளி மெய்யைத் தழுவுகிறவர்களாகிருர்கள். இப்படியாக ஒரு மஹான் தன் தேகத்தை அக்கிரமத்துக்கு பலியாகக்கொடுப்பதால், அதுகாரணமாக ஜனங்கள் உள்ளத்திலுதித்து விளங்கும் இந்த "உண்மைப் பிரகாச" வெளிச்சத்தில் அந்த அக்கிரமமே யழிந்துபோகிறது.

எப்படி என்றல்:—மானுட அதிகாரமெல்லாம் ஜன இச்சையைப் பொறுத்தது. ஜனங்களில் பெரும்பாலார் இஷ்டம் அதிகாரத்துக்கனுகூலமாகவிருந்தால்தான் அவர்கள் பலாத்காரமாய் தங்கள் இஷ்டத்தை நிறைவேற்றிக்கொள்ளலாம். பெரும்பாலார் இப்படி அக்கிரம அதிகாரத்துக்குடந்தையாகவிருந்தாலும், ஒருவரேனும் ஆத்மவழிப்பட்டு, பிரகிருதிதர்மத்தையுணர்ந்து அதற்கு மாருகவுள்ள இந்த அதிகாரம் செல்லத்தக்கதல்லவென்று தன்மட்டில் அது செல்லாமையைக்காட்டி வற்புறுத்துங்கால், அதிகாரத்தின் விசை உடனே ஜிவ்வென்று குறைந்துபோகிறது. ஆகையால் அதிகாரத்திலிருப்பவர்கள் அக்கிரமம் அநாத்மர்களிடத்திற் செல்லுமேயன்றி, ஆத்மானுசந்தான சாதுக்களிடம் செல்லாது. இன்றைக்கு

1908 வருஷங்களுக்குமுன் யேசுகிறிஸ்து அதிகாரிகள் அக்கிரமத்தை எதிர்க்காமலெதிர்த்து அதற்காகக் குரூரமாகச் சிலுவையிலறையப் பெற்றுக் கொலையாளிகளைப்போல்சித்திரவதை செய்து கொல்லப்பட்டார். அப்பொழுது அவர் தேகத்தைப் பலிவாங்கிய இராஜாங்க அதிகாரம், இப்பொழுது அவருடைய பாத தூளியை யெடுத்துத் தலையில் வைத்துக்கொண்டு அவருக்குத் தொண்டு செய்து வருகிறது. அற்றைக்கு அவர்முன் வணங்காமுடி காட்டிய இராஜகிரீடம் இற்றைக்கு அவர் பாததூளியைத்தரிக்கிறது. அவரும் புகழுடம்பெடுத்து எல்லா தர்மிஷ்டர்களுடைய ஹிருதய கமலத்திலும் நீங்காத நித்தியவாழ்வு பெற்று எல்லாராலும் பூஜிக்கப்பட்டு வருகிறார். அவரை யெதிர்த்துக் கொடுமை செய்தவர்கள் பொதுஜன இழுக்குக்குப் பாத்திரராகி யெல்லாராலும் பாதகர்களென்று நிந்திக்கப்படுகிறார்கள்.

இப்படி "எதிர்க்காமலெதிர்த்தல்" ஆத்மஞானம்பெற்றவர்களுக்கேசாத்தியம். அவர்கள் அக்கிரமத்தை அக்கிரமத்தால் வெல்வதில்லை. பகையைப் பகையால் வெல்லமுடியாதென்று பகவான் புத்தர் போதித்திருக்கிறார். இந்த உண்மையை அவர்கள் ஒவ்வொருவரும் உள்ளபடி யுணர்ந்தனுபவித்தவர்களாதலால், அகந்தை யிழந்து ஆத்மானுசந்தானத்திலிருக்கும் அவர்கள், வல்லாளரை வெல்ல வெடிகுண்டுகளும் யந்திரங்களும் தேடுவதில்லை. அக்கிரமத்தை எதிர்க்காமலெதிர்த்து அதன் பலத்தைக் குலைத்துவிடுவார்கள். தர்மத்தினலன்றி அதர்மத்தின லெதற்கும் பலமில்லை. அதர்மத்தைப் போக்க அதர்மத்தை யனுசரித்தால் அதர்மம் விர்த்தியாகி வளரும். இருட்டை இருட்டினல் போக்குவது கூடாதுபோல, அதர்மத்தை அதர்மத்தால் வெல்லலாகாது. ஆனல் வெளிச்சத்தின்முன் இருட்டுத் தானேபறந்தோடிப் போவதுபோல, தர்மத்தின் முன் அதர்மம் தலையெடுத்து நிற்க மாட்டாது என்பதை நன்றாக அறியவேண்டும். பகவான் அதர்மம் தலையெடுக்கும் பொழுதெல்லாம் தான் அவதாரம்வதாகச்சொன்னதின் உண்மை யென்னவெனில், அதர்மம் தலையெடுத்து எதும் தெரியாமல் தலைவிரிகோலமாய் ஆடும்பொழுது தான் தர்மஸ்வரூபியாக அவதரித்து அந்த தர்மாத்மவெளிச்சத்தில் அதர்மமெல்லாம் அழிந்துபோகும்படி செய்வாரென்பதேயன்றி வேறல்ல. இதுவரையில் அதிகாரிகள் அக்கிரமமே யதிகமாயிருந்துவந்தது! இப்பொழுது, ஜனங்களில் புத்திகெட்டசிலரும் அவ்வக்கிரமத்தை அக்கிரமத்தால் வெல்ல எண்ணி உயிருக்குத்துணிந்து உயிர்க்கொலைசெய்ய வெடிமருந்துகளும் குண்டுகளும் தயார் செய்கிறதென்று துவங்கியிருப்பதாகத் தெரிவதால், இதனல் அக்கிரமம் இன்னும் அதிகரிக்குமேயன்றிக் குறையாது. இப்படி அளவுகடந்து அக்கிரமம் அதிகரிக்கும்போது, தர்மம் தலையெடுக்கும் காலம் கிட்டிவிடுமென்கிற எண்ணம் உறுதிப்படக்காரணமாகிறது. இதுவே சத்துக்களுக்கும் சாதுக்களுக்கும் ஆறுதலை விளைக்கும் எண்ணமாயிருக்கிறது! ஓம்தத்ஸத்.

---

## "THAT WHICH YE DO UNTO OTHERS EVEN THAT WILL BE DONE UNTO YOU."

## "முற்பகல் செய்யிற் பிற்பகல் விளையும்."

---

"பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா பிற்பகற் றாமே வரும்."—திருக்குறள்.

"ஆனைவரும் பின்னே மணியோசைவரும் முன்னே!" யென்பது ஒரு பழமொழி. அப்படியென்றாலென்ன? யானை வரும்பொழுது, யானையின் இருபுறமும் கட்டித்தொங்கும் மணியின் சப்தம் அதுவருவதை முன்னிட்டு வெகுதூரம் தெரிவிக்கும்! மணியோசையின் அடையாளத்தால், பின்னல் யானைவருகிறதென்று நன்றாகத் தெரிந்துகொள்ளலாம். ஆனைக்கும் மணியோசைக்குமுள்ள சம்பந்தமென்ன?

ஆனை அவயவி, மணியோசை அவயவம்! அதாவது இரண்டுக்கும் அத்வைத சம்பந்தமுண்டென்று கொள்ளல்வேண்டும். "பூவும் மணமும் போல்" என்றும் சொல்வார்கள். இல்லாவிட்டால் "ஆனைவரும் பின்னே மணியோசைவரு முன்னே" யென்ற பழமொழிக்கு அர்த்தமேயில்லாமற்போம். மணியோசைகேட்டகாரணத்தால், ஆனைவருதலாம் காரியம் அறிந்துகொள்ளப்படுகிறது. காரண காரியங்களின் தொடர்பு இதனுல் விளங்கும். ஆனை வருகிற காரணத்தினுல் மணியோசை நிகழ்கிறது என்னும் அனுபவம் உள்ளத்தில் உறைத்திருந்தாலன்றி, மணியோசை கேட்ட காரணத்தினுல் ஆனைவருகிறதென்று பஹிர்முகத்தில் சொல்லவராது. காரண காரியங்களின் உறவு விளங்க, காரண காரியங்களின் உற்பத்தி லயம் ஆகிற அனுபவம் வேண்டும். மணியோசை ஆனை வருதலினுல் உண்டாகிறது. ஆனை வராமல் நின்றுகொண்டிருந்தால் மணியோசை கேளாது! ஆதியில் காரியமாய் நிகழும் மணியோசையானது, பின்னுல் வரும் அனுமானத்தில் யானைவருதலாகிய அறிவுக்குக்காரணமாகநிற்கிறது. மணியோசை காரணமாகவும், காரியமாகவுமிருந்தாலும், இரண்டிற்கும் ஒரு வித்தியாசமுண்டு. முதலாவதான் ஆனைவருதலிலிருந்து மணியோசை யுண்டாதல் பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் சாக்ஷாத்காரமாக அறியத்தக்கது. இரண்டாவது அந்த சாக்ஷாத்கார அனுபவம் உள்ளத்திற் பதிந்திருப்பதால் அனுமானப் பிரமாணத்தால் அறியத்தக்கது. மணியோசைக்கும் யானைக்குமுள்ள இந்த உறவே நாம் செய் வினை, அவ்வினைப்பயன் ஆகிய இரண்டிற்கும் இருக்கிறது. "கேடுவரும் பின்னே மதிகெட்டுவரும் முன்னே."

நாம் "செய்வினை" என்னவுண்டோ அதற்குக் கர்மாவென்று சொல்கிறது. நாம் செய்த கர்மாவின் பயனுக விளைவதொன்றுண்டே அதற்குக் கர்மபலன் அல்லது விதிப்பயன் என்று சொல்லுகிறது. இந்த விதியை அறிந்து கர்மமியற்றுவது ஒன்றே விதிப்பயனை வெல்ல வழிகாட்டுவதாகும். மற்றப்படி செய் வினை யெல்லாம் கர்மத்தைப் பெருக்கி விதியை வளரச்செய்யும். "விதி" என்றால் என்ன?

காரணகாரிய தோரணை யேற்படுவதற்கான வழியொன்று என்னவுண்டோ, அதற்கே விதியென்று பேர். "தலைவிதி," என்றால் பூர்வஜன்ம வாசனையினுல் பயனைத்தரக் காத்திருக்கும் "கர்மபலன்கள்" என்ன என்ன வுண்டோ அதற்குச்சொல்கிறது. அறிவில்லா மாந்தர் நித்யாநித்ய வஸ்துவிவேகமின்றி இந்திரியங்கள் வழிப்பட்டுச்சென்று "முன்னினித்துப் பின் கசக்கும்" காரியங்களைச் செய்து, முன்இனிப்பாய்த் தோன்றியது கர்மவிதிப்படி பின் கசப்பாய் வந்து லபிக்குங்கால், "ஐயோ விதியே!" யென்றுசொல்லி விதியைநொந்து அழுவார்கள். விவேகிகளுக்கு அப்படி நேர்ந்தால் இப்பொழுது கசப்பது முன் செய்ததோர் கர்மத்தின் பயனென்றறிந்து அதைச்செய்தவர் தாமேயாதலால், அதை அனுபவிப்பதும் தாமே யாக விருக்கவேண்டுமென்றுணர்ந்து, காரண-காரிய தோரணை விதிகளை யாராய்ந்து, இன்னபலன் இப்பொழுது நிகழ்ந்திருப்பதால், இப்பலனைக் கொடுக்க நாம் முன்னர் இன்னவித கர்மம் செய்திருக்கவேண்டுமென்று, மணியோசையைக் கொண்டு ஆனைவருவதை யூகித்தறிவார் போல, கர்மபலனைக் கண்டு முன் செய்த கர்ம ஸ்வபாவத்தை யூகித்தறிந்து, இன்ன செய்யின் இன்னது பயனுய் விளையுமென்பதை ஸ்வானுபவத்தாலறிந்துகொண்டு, அக்கர்ம பந்தத்தினின்றும் நீங்க வழிதேடுவார்கள். இது விவேகிகளுக்கு அழகாம். அவிவேகிகள் "சணப்பன் வீட்டுக் கோழிபோல்" மேன்மேலும் கர்மபந்தத்தில் சிக்கியுழல்வாராக, விவேகிகள் ஒருமுறை செய்ததின் பயனையனுபவித்ததும் அதன் காரணத்தையறிந்துகொண்டு அவ்வித கர்மபந்தத்தில் சிக்காதிருக்க வழிதேடுவார்கள்.

மனிதன் கர்மத்தைச் செய்யாதிருப்பது சாத்தியமின்மையாலும், கர்மஞ் செய்தால் அது பயனைக்கொடுப்பது கர்மவிதியாதலாலும், இரண்டுக்குந் தப்புவதெப்படியென்று கேட்கலாம். இப்படிப்பட்ட விலங்கங்களிலிருந்து தப்பித்

கொள்ள வழிகாட்டுபவர் எவரோ அவரே ஸத்குருவாவர். ஸ்ரீகிருஷ்ணபகவான், போர்முகத்தில், அர்ச்சுனனுக்கு நிஷ்காம்யகர்மயோகத்தை உபதேசித்து அவனைக் கடைத்தேறச் செய்தார். அது அவனுக்கு மாத்திரம் சொன்னதல்ல. "ஸத்யம்வத : தர்மஞ்சர" என்ற வேத வாக்கியப்படி நடக்கும்தீக்ஷாபுருஷன் அப்படி நடக்குங்கால் நேரும் தர்மசங்கடங்களினின்றும் தப்பிக்கொள்ள வழி தெரியாமல் விழிப்பான். அந்தவழியில் நடந்து கடைத்தேறியவர் யாரோ அவர் ஒருவரே அவனுக்கு வழிகாட்டியாகவிருந்து அவனைக்காக்க முடியும். அப்படியுள்ளவர் வாய்க்குங்காலம் எதுவோ அதற்கே ஸத்குருகடாக்ஷம் என்று சொல்கிறது. இப்படி ஸத்குருகடாக்ஷம் பெற்றவர் அகமும் புறமும் ஒன்றாகி அகத்திற்கண்டதைப்புறத்தும், புறத்திற்கண்டதை அகத்தும் ஆராய்ந்து "அகம்-புறம்" என்னு மிரண்டுக்குமுள்ள வித்தியாசம் அற்றுப்போகும்வரையில் விசார புருஷர்களாயிருந்து, ஸத்குருவையடுத்து, அவர் அருள் நோக்கால் தெரிவிக்கும் உளவுமர்மமங்களை யறிந்துகொண்டு, அவற்றின் உண்மையைத் தாம் நேர்நேரில் ஸ்வானுபவமாக அறியும்வரையில், அவர்கள் காட்டிய வழியில் நடந்து, ஸத்குரு சொல்லாமற் சொல்லிய சாதனங்களைப்பழகி அப்பியாஸ யோகத்திலிருந்துவருவார்கள்.

அப்படியிருந்து வருகையில் அவர்களுக்கு "முற்பகற்செய்யிற் பிற்பகல் விளையும்" என்னும் மூதுரை சாக்ஷாத்காரமாய் ஸ்வானுபவத்தில் விளங்கும். யேசுகிறிஸ்துவும், மற்ற எல்லா மஹான்களும், இதனுண்மையை உபதேச வழியாகக் கற்பித்திருக்கிறார்கள். "Do unto others as you will be done by." "உன்னைப்போல் பிறரை நினைத்து நடந்துகொள்!" என்றார். ஔவையார் சொல்லிய மூதுரையும் திருவள்ளுவநாயனர் திருக்குறளும், இதன் தலைப்பெயராகவும், அதன்கீழ் விளங்கும் மேற்கோளாகவும் எடுத்தாளப்பெற்றிருக்கிறது. பகவத்கீதையில் ஸ்ரீகிருஷ்ணபகவான், கர்மங்களின் ஸ்வபாவத்தை நன்றாகவெடுத்துப்போதித்திருக்கிறார். கர்மத்தின் ஸ்வபாவமறியாதவன் கர்மபந்தத்தைக் கடக்கும் வழியறியான். ஆகையால் கர்மத்தின் ஸ்வபாவமறிந்து கர்மபந்தத்தைக் கடந்து கர்மஞ்செய்கிறவர்கள் யாரோ அவரே உண்மையான கர்மயோகியாவர். நிஷ்காம்ய கர்மத்தின் உண்மையையுணர்ந்தவர் அவரே யாவர். இவ்வளவும் ஏன் இங்கே பிரஸ்தாபிக்கவேண்டுமென்றால், இப்பொழுது நடக்கும் விஷயங்களைப் பார்த்தால், "ஐயோ! புண்ய பூமியாகிய இப்பரதக்கண்டம் இப்படியும் சீரழிந்து சிறுமைப்பட்டு நிற்குமோ!"வென்னும் பரிதாபம் உதிக்கிறபடியால், அதையொட்டிக் காரிய காரணங்களைத் தொடர்ந்து விசாரிக்குங்கால், இவ்வித எண்ணங்கள் உதிக்கின்றன.

இராஜாங்கத்தார் பிரஜைகளினுடைய மனோதர்மம் உணராது அவர்கள் மனதையடக்க முரட்டுச்சட்டம்செய்து துராகிருதமாக ஜனங்களுடைய வாக்கு மனோ சுதந்தரங்களை யடக்க யத்தனிக்க, அது "பிள்ளையார் பிடிக்கப்போய்க் குரங்காய் முடிந்த கதையாகவும்" "தலைவலி போய் திருகுவலி வந்ததென்னும் பழமொழி போலும்", வாயைத்திறந்தால் விரோதம், மனம் கிளர்த்தால் ஒழுங்கீனம் என்று கெடுபிடி செய்து வந்தது, இராஜாங்க வைரிகள் என்னும் உயிருக்குத் துணிந்த சாகஸக்காரர்கள் சிலரை யுண்டுபண்ணி விட்டுவிடலாயிற்று. குண்டுவெடி யக்கிரமங்கள், வங்காளத்துப் போலீசார் செய்யும் அபார முயற்சிகளினால் அடங்கி விட்டதாகச் சொல்வதற் கில்லாமலிருக்கிறது." எல்லாரும் உயிருக்கு பயந்து அதிர்வெடி கேட்டால் "குண்டுவெடி மோசம்" என்றும், சட்டியில் சீனிவெடி சுட்டால், "வெடிகுண்டு வேதனை" யென்றும், இப்படி திகில்பட்டுத் தியங்கிக் கொண்டிருக்கிறார்கள். இராஜாங்க வைரிகளோ, எப்படியோ, குண்டு

வெடிகளைத் தயார்செய்து, ஜனப்பழக்க மதிகமான இடங்களில் வைத்து ஜனங்களை நடுங்கச் செய்து வருகிறார்கள். அன்றைக்கு ஒரு குண்டு வெடி குப்பைவண்டியின் சக்கரமேறித் திடீரென்று மதருவில் வெடித்து ஆபத்து விளைத்தது. மற்றொருநாட் காலையில் கிறிஸ்து கோயில் வாசற்படிக் கதவினருகில் ஒரு வெடிகுண்டிருக்கக் காணப்பட்டது. நல்ல வேளையாக அது வெடிக்குமுன் கண்டு, லாகவமாக அதையெடுத்துக்கொண்டுபோய் விட்டார்கள். கவர்ன்மெண்டார் இந்த அக்கிரமங்களைப் பிடித்துக் கண்டிப்பதிலும், இராஜாங்கவைரிகள், இராஜாங்கத்தாரும் போலீஸாரும் செய்யும் சூழ்ச்சிக்குமேல் சூழ்ச்சிசெய்து அவர்கள் சமர்த்தெல்லாம் வீண்போகவடிப்பதிலும் மும்முரமாயிருந் துழைத்துவர, இருவருக்கும் நடுவே ஏழைஜனங்கள் பஞ்சம், பிளேக், முதலிய இயற்கை விபத்துக்களோடு, இந்தச் செயற்கைவிபத்துக்கு மாளாகித் தியங்கித் தவித்துக்கொண்டிருக்கிறார்கள். அன்றி, இதுதான் சமயமென்று போலீஸார், தங்களுக்காகாதவர்களை யெல்லாம், வெடிகுண்டு விபத்துக்கள் ஒன்றில்லாவிட்டால் ஒன்றில் சம்பந்தப்பட்டவர்களாகச் சமுசயித்து, வீட்டிற்புகுந்து சோதனைபோட்டுச் சங்கடங்கள் விளைத்து அவர்களொரு பக்கத்தில் வீண்பீதியுண்டுபண்ணி வருகிறார்கள். அவர்கள் பீதிக்குப் பயந்து ஒருவர் ரயிலில் விழுந்து தற்கொலை செய்துகொண்டு விட்டார். இப்படி ஏழைக்குடிகள் மனம்பதறி "ஐயோ!" என்று ஏங்கியழும் கண்ணீர் வீண்போகுமா! என்று ஸாதுக்கள் சித்தமிரங்கி வருந்துகிறார்கள்.

இந்த சமயத்தில் "முற்பகற் செய்யிற் பிற்பகல் விளையும்" என்னும் மூதுரையின் கருத்தைச் சிந்தித்து இராஜ தர்மம் குன்றாது காப்பாற்றிவரத்தக்க இராஜாங்க நிபுணர்கள் யாரையுங் காணோமே! இருக்கிறவர்கள் நிபுணத்துவம் கோணல் வழியிற் போகிறது! பயோனியர் என்னும் பத்திரிகை இராஜாங்கவைரிகள் முதல் இராஜப்பிரதிநிதிசபை மெம்பர்கள் வரையில் எல்லாரும் படிப்படியாக தோரணங் கட்டியதுபோலிருந்து பிரிடிஷ் இராஜங்கத்தைத் தலைகவிழ்க்கப் பார்க்கிறார்களென்று யோஜனையின்றி யெழுதிப் பிதற்றுகிறது. ஐயோ பாவம்! இப்பத்திராசிரியர் நினைப்பதுபோல் "இராஜப்பிரதிநிதிசபையிலிருக்கும் மெம்பர்கள்முதல் உயிருக்குத்துணிந்து குண்டுவெடி பக்கிரமஞ்செய்யப் புகுந்திருக்கும் புத்தியில்லா வாலிபர்களீறாக எல்லாரும் பிரிடிஷ் இராஜாங்கத்துக்கு விரோதமா யிருந்தால் அந்த இராஜாங்கம் ஏன் அப்படி ஸர்வஜனத் துவேஷத்துக்குப் பாத்திரமாகவேண்டுமென்று சிறிது யோஜிப்பா ரில்லையே! இப்படிப்பட்ட சுயநயப்புலிகள் துர்ப்போதனையைக் கேட்டு ஸ்வபுத்தியை விட்டு, இரவல் புத்தியைக் கொண்டு இந்தியாமந்திரி இராஜாங்கம் நடத்தத் தீர்மானித்திருப்பதால் தான் இத்தனை அக்கிரமங்களும் நடக்கக் காரணமாயினவென்று வர்மம் சாதித்து வற்புறுத்துவாருமுளர். இவர் கக்ஷியும் பக்ஷபாதக மற்றதென்று சொல்வதற்கில்லை. கர்மம் யாரையும் விடாது. கர்மத்தை வென்ற அரசன் சனகர் கோமான் ஒருவனைத்தவிர மற்றவர்களைக் கண்டிலேம். வியஷ்டிரூபத்தில் மனிதனைப் பிடிக்கும் கர்மம், சமஷ்டி ரூபத்தில், தேசத்தையும், இராஜாங்கத்தையும் பீடிக்கும். கர்மபீடை நேரிட்டால், அதை யனுபவித்தே தீரவேண்டும். ஆனால் அதை யனுபவிக்குங் காலத்தில் இன்னமும் தீவினைகளைச் செய்து கர்மபந்தத்தை விர்த்திசெய்து கொள்வதினால் துன்பமேயன்றி, அதனால் சுகம் சிறிதுமில்லை. திருவள்ளுவநாயனார் எடுத்துக்கூறி யிருக்கிறபடி:—

"பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்."

என்பது திண்ணம். இதை இராஜாங்கவைரிகளேயன்றி, இராஜாங்கத் தலைவர்களும்,

இராஜாங்க உத்தியோகஸ்தர்களும், இராஜதந்திரிகளென்று பேர்வைத்துக்கொண்டு பிதற்றும் (Politicians என்கிற) பேமானிகளும் கவனிக்கவேண்டும். இப்புண்யபூமியின் கண்யம் குறைந்தால் எண்ணிய எண்ணம் யாருக்கும் நிறைவேறாது. மஹாபிரளயம் போல் அக்கிரமம் முற்றி அதர்மமாகி, அதர்மம் பழுத்து அனைவரையும் பூண்டோடு நாசஞ்செய்துவிடும்! இது சத்தியம்! சத்தியம்! உண்மைவாதிகள் உள்ளத்தை யுள்ளபடி யுரைக்க அஞ்சி மௌனஞ் சாதிக்கில் மோசம் வருமாகையால், என் அம்பிகையாணை, இதை யெல்லாரும் அறிய இங்கெடுத் தறையலானேன். தர்மமே ஜெயம்! தெய்வமேதுணை! ஸத்தியமே காவல்! நித்தியமே சாக்ஷி! இங்கே, யிப்பொழுது முதன் மந்திரியாக விருக்கும் மகாகனம்பொருந்திய மிஸ்டர் அஸ்குவித், அவருக்குமுன் முதல் மந்திரிஸ்தானத்திலிருந்து இப்பொழுதுதான் காலஞ்சென்று போன ஸர் ஹென்றி காம்பெல்-பானர்மான் அவர்களுடைய குணாதிசயங்களைப்பற்றிக் காமன்ஸ் சபையில் பேசிய பொழுது கடைசியாக வெடுத்தாண்ட மேற்கோள் ஒன்றை அப்படியே எடுத்துவரைய வேண்டுமென்னு மெண்ணத்தைத் தடுக்கமுடியாமல் அதை இங்கிலீஷில் தானே யெடுத்தெழுதுகிறேன். அவர் வாய்ப்பிறப்பாக வந்த மேற்கோள் இது:—

"How happy is he born and taught
That serveth not another's will;
Whose armour is his honest thought,
And simple truth his utmost skill;

"This man is freed from servile bands
Of hope to rise or fear to fall;
Lord of himself though not of lands,
And, having nothing, yet hath all."

ஜீவன்முக்தி லக்ஷணத்தைக் குறிக்கும் இந்தப் பாக்கள், காலஞ்சென்ற முதல்மந்திரிக்கு எப்படிப் பொருந்தியதாயிருந்ததோ, அப்படிப் போல், அவரவ்வளவு பேரும், கிதாப்பும் இராஜாங்கத்தில் பெறவிடினும், உண்மையான மேன்மைக்குணத்தில் அவருக்கு ஒரு சிறிதும் தாழ்விலரான ஜீவன்முக்திபெற்ற மஹான்கள் எத்தனையோ பேர்கள் வசிக்கும் இந்த ஆரிய மஹாதேசத்தை, ஆடுமாடுகளை மேய்த்துக் கட்டுவதுபோல், ஏகாதிபத்தியத்தினால், உத்தியோகஸ்தர்கள் மனம்போனபடியாளக் கருதும் கபோதியெண்ணம், தத்துவஞானியென்றுபேர்பெற்ற விஸ்கௌண்ட் மார்லிக்குத் தோற்றினது, இந்தியாவின் பூர்வகர்மபலனேயன்றி வேறெல்ல. விதிவசமே வந்ததிதுவானாலும் விதியை யறிந்து நடந்தால், விதியையறிந்த மதியாலே விதியையும் வெல்லலாம் என்பது திண்ணம்.

> "தான்முன்னஞ்செய்த விதிவழிதானல்லால்
> வான்முன்னஞ்செய்தங்குவைத்ததோர் மாட்டில்லை."

யென்பது திருமந்திரம். இந்தியர்கள் விதிவசத்தாலே யிக்கதியடைந்தால் அவ்விதிவசத்தைக் கொண்டே இதிலிருந்து மீட்சியும் பெறலாம். ஆதலால்தான் "வந்தேமாதரம், வந்தேமாதரம்" என்று விதியையறியும் அறிவையளிக்கும் "அறிவுருவாம்" தேவியைச் சதாபணிந்து போற்றிவரும் "தாயே சரணம், தாயே சரணம்" என்னும் அபயக்குரல் எண்திசையும்பரவியெதிரொலியிட்டு முழங்குகிறது. மூடமதிகள் உண்மையறியாது கெட்டுப்போகிறார்கள். "தன்வினை தன்னைச்சுடும்" என்பது நிச்சயமாதலால் அவரவர்கள் செய்யும் சூழ்வினை அவரையே பற்றுமென்பதிற் சந்தேகமில்லை. அறிவேசரண்! அறிவேகதி! அறிவேமதி! அறிவே சதி! அறிவே யவள்! அறிவேயது! அதுவேயெலாம்! எல்லாம் அதுவே! ஓம்தத்ஸத்.

## HOW TO WATER FRUIT TREES

## பழம்தரும் மரங்களுக்குத் தண்ணீர் வார்த்தல்.

பழவர்க்கங்கள் போன்ற பலனைத்தரும் மரங்களுக்குத் தண்ணீர் வார்த்தலைப்பற்றி வியவசாய இலாகா டிப்டி டைரெக்டர் மிஸ்டர் எச். வி. ஸாம்ப்ஸன் ஒரு குறிப்பெழுதியிருக்கிறார். மேற்படியிலாகாத்தலைவர் மிஸ்டர் கௌச்மான் அவர்கள் அதைப் பிரசுரிக்கக் கேட்டுக்கொண்டபடி கிழே பிரிசுரிக்கிறோம்.

பழந்தரு மரங்களை வைத்துப் பயிராக்குகிறவர்கள் மரத்தைச் சுற்றிப் பள்ளம் செய்து தண்ணீர் வார்க்கிறது வழக்கமாகவிருக்கிறது. அப்படி தண்ணீர் வார்ப்பதினால் அம்மரங்கள் செழிப்புற்று வளராமல் நோயுற்று நோஞ்சலாக விருப்பதாகக்காண்கின்றன. இது அதிசயமல்ல. ஏன் என்றால், அடிமரத்தைச்சுற்றித் தண்ணீர் வார்ப்பது சுத்தப் பிசகு: கடவுள் மரங்களுக்கு இலைகளைக்கொடுத்து அவ்விலைகள் மழை ஜலம் மரத்தடியில் விழாதபடி காக்கும்படி செய்திருக்கிறது காரணமின்றிச் செய்ததல்ல.

செடிகள் வளரவேண்டுமானால் தண்ணீர் வார்க்க வேண்டுமென்பது அவசியம். தண்ணீரில்லாமல் செடிவளராது. இந்தத்தண்ணீர் வேரின் நுனிப்பாகங்களால் உறுஞ்சி அங்கிருந்து நாடி நரம்புகள் வழியாக மரத்தின் சத்தாக மேலேறி யெங்கும் பரவுகிறது என்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயம். மரத்தைச் சுற்றியிருக்கும் அடிவேர்கள் வேரின் நுனியால் உட்கொண்ட நீரை மேலேற்றுவதற்கான வழிகளேயன்றி, அடிவேர்களுக்குநேராக நீரையுட்கொள்ளும் சக்தியில்லை. இது நன்றாகத் தெரிந்திருந்தால் மரத்தின் அடியை நோண்டித்தண்ணீர் வார்க்கமாட்டார்கள். ஏனென்றால் மரத்தி னடிவேர்களுக்குத் தண்ணீர் வேண்டியதில்லைமட்டுமென்பதில்லை. அடி மரத்தைச் சுற்றித் தண்ணீர் வார்ப்பதால், அடிவேர்கள் பல சமயங்களில அழுகிப்போகின்றன. உண்மையாகவே கொடிமாதுளைப்பழ மரங்களுக்கு நேரும் (Collar rot) என்னும் அடிவேர் கெடும் வியாதி இப்படித் தண்ணீர் வார்ப்பதாலேயே யுண்டாகிறது. ஏனென்றால் அடிமரத்தைச் சுற்றி வார்க்கும் தண்ணீர் அடிவேர்களை நமுத்துப் போகச் செய்கிறது. அதனால் மரமுழுவதும் பழுத்து, நோய்கண்டு, பட்டுப்போகிறது. ஆகையினால் தண்ணீர் வார்த்தலும் எருப்போடுதலும் அடிமரத்தைச் சுற்றிப் போடுவதிற் பிரயோசனமில்லை. ஆனால் நுனிவேர்களெட்டும்படியானவிதமாய் கிளை வேர்களைச்சுற்றித் தண்ணீர் வார்த்து எருப்போடவேண்டும்.

பழ விருக்ஷங்கள் (பழம் தரும் மரங்கள்) கெட்டுப்போகாமலிருக்க, இவ்விதம் முறைதப்பித்தண்ணீர் வார்ப்பதைவிட்டு, அடிமரத்தைச் சுற்றியுள்ள பள்ளத்தை சிறுகச்சிறுக மூடவேண்டும். ஆனால் அதை ஒரே மட்டாகச் செய்யக்கூடாது. ஏனென்றால் அடிவேர்கள் தரையின் மேல்மட்டத்திலிருந்து கொஞ்சதூரத்திலிருக்கப் பழகியிருக்கின்றன. திடீரென்று இரண்டொரு அடிஉயரத்துக்கு மண்ணைக்கொட்டி மூடினால் உஷ்ணம் அதிகரித்து கேடுறக்கூடும். தண்ணீர் விட மரத்தின் வெளிவேர்களிருக்குமிடத்தில் விஸ்தாரமாகத்தண்ணீர்பாயப்பாத்திகட்டி ஜலம்வார்க்கவேண்டும். ஒவ்வொருதரமும் ஜலம் விட்டபின் தண்ணீர் ஆவியாக எழும்பிப் போகாதபடி மம்மட்டியினால் கொத்திக்கொடுக்கவேண்டும் இப்படிச் செய்தால் மரம் செழித்தோங்கி நன்றாகப் பலனைத்தரும்.

---

இனம்! இனம்!! இனம்!!!

விவேகசிந்தாமணியை வாசிக்கும் ஒவ்வொருவரும் ஒருபுது சந்தாதாரரைச் சேர்த்தனுப்ப வேண்டுமாய்க் கேட்டுக்கொள்கிறோம். 5 கையெப்பக்காரர்கள் சேர்த்தனுப்புகிறவர்களுக்கு ஒரு வருஷத்துக்குவிவேகசிந்தாமணி இனமாக அனுப்பப்படும். ஒவ்வொரு கிராமங்களிலும் ஒரு காபியாவது வாங்கும்படி செய்யவேண்டும். மாதிரிகாபி வேண்டுவோர் அரையணாத் தலையனுப்பினால் அனுப்பப்படும். "சென்னை, மைலாப்பூர், லலிதாலயம், அ. ப. ஏஜன்ஸி காரியதரிசி, வி. வி. ஸ்வாமிநாதையருக்கு" என்று விலாஸம் எழுதவேண்டும்.

## MAHÎSUTA—A NOVEL

## மஹீஸுதா

(ஓர் ஹிந்துமாது எழுதியது)

ஸந்தியாகாலத்து சூரியன் ஸ்வர்ணமயமாகப் பிரகாசித்தான். எங்கே பார்த்தாலும் ஆநந்தமயமான செந்நிறம். பகலவனுடைய சாந்த நிலைமையை இப்போதுதான் அறிந்தோமென்று சொல்லும்படி மனோரம்யமாயிருந்தது. பிராணிகளுக்கு ஸுகமும் துக்கமும் மாறி மாறிவந்துகொண்டே இருக்கும். வயிற்றுக்கில்லையென்றழுவோர் சிலர். பிள்ளை, தாய்பேச்சைக்கேளாமல் பெண்சாதியோடிருக்கிறானேயென்று துக்கிப்பவர் சிலர். புருஷன் தன் மனப்படி நடக்கவில்லையே என்று வியஸனிப்பவர் சிலர். பொழுதுவிடிந்தால் கோர்ட்டில் ஜட்ஜ்மெண்டு சொல்வார்களே, முடிவு என்னவாகுமோவென்று பயந்து ஒளிபவர் சிலர். வரும்படி ஸரியாய் வருகிறதில்லையே என்று உருகுவோர் சிலர். தட்டானிடம் கொடுத்த நகைகளை ஏன் கொண்டுவரவில்லையென்று கணவனைக் கடிந்து கொள்ளும் ரமணிகள் சிலர். அன்றைக்கு வஸூலான முதல், வட்டித்தொகைகளை எண்ணிப் பெட்டிக்குள்வைத்துப் பூட்டும் பிரபுக்கள் சிலர். யாதொரு வேலையும் செய்யாமல் இரவும் பகலும் தங்களுக்கே சொந்தமென்றெண்ணி காலம் கழிப்பவர் சிலர். அண்டைவீட்டுக்காரர்களின் நிலைமையைக் கண்டு பொறாமைப்படுவோர் சிலர். உலகத்திலுள்ள மனிதர்கள் ஒரேவித ஸ்வபாவம் கொண்டிரார். அவரவர்களின் சரீர அமைப்புக்குத் தக்கவண்ணம் நடத்தை காரியங்கள் ஏற்படுகின்றன. எல்லோரும் புத்திசாலிகளாவது ஸாத்யமா! ஏக காலத்தில் ஸத்யமார்க்கத்தை மனிதர்கள் அனுஷ்டிப்பார்களா! "உலகம் பலவிதம்" என்பதுபோல் ஸஜ்ஜனர்களாலும் துர்ஜனர்களாலும் நிறைந்திருந்தது. திவாகரனுடைய மகிமையை எடுத்துச் சொல்லத்தரமன்று.

சேகரபுரியில் நீலகண்டேசுவர தேவாலயமுண்டு. பரமேசுவரனையும் பார்வதிதேவியையும் தரிசிப்பது ஆரியர்களுக்கு மகதாநந்தத்தைக் கொடுக்கும். சேகரபுரவாஸிகளெல்லாம் ஸாயங்காலவிநோதத்தைப் பார்வையிட்டு அவரவர்களுக்குத் தோன்றின அபிப்பிராயங்களை வெளியிட்டனர். சிறிய ஊரானதால் அவ்விடத்திலுள்ள ஜனங்கள் ஒருவரையொருவர் நன்றாயறிவார்கள். யார் வீட்டில் என்ன நடந்தாலும் அங்குள்ள மனிதர்களுக்கு உடனே தெரியும். மாலைவேளையில் ஒரு ஸுந்தரி சாந்த முகத்தோடு கம்பீரமாய் ஓர் நதிக்கரையிலுட்கார்ந்திருந்தாள். அவள் கையிலணிந்திருந்த ரத்நவளையல் பளபள வென்று மின்னிற்று. அவள் ஜலராசியைப் பார்த்து ஆனந்த மடைந்தாள். சிலநேரத்துக்குள் அவள் முகம் வாடிற்று. பெருமூச்சு விட்டாள். ரூபோன்மாதினியான அம்மகிஷி ஏன் அவ்வித மாறுதலையடைந்தாள்? அதை யார்அறிவார்கள்! ஸூர்யனுடைய வேகம் பச்சிம† திசைக்குச் சென்றதென்றோ! தான், தனியே இருப்பதற்காகவோ! மனவருத்த மேதாவதுண்டோ! அப்படியொன்றையும் காணோம். அவளுடைய ரூபராசிக்கு இவ்வித குறைவுகளுண்டாகா. ஆகிலும் அவள் முகவாட்டத்துக்கென்ன காரண மிருக்கும்? பதினெட்டு வயதுள்ள யௌவனவதி கண்களில் நீர் ததும்ப 'அம்மா!' வென்று சொல்லி எழுந்தாள். நதியிலிருந்து அவள் வீட்டை நோக்கி நடந்தாள். அவள் வீட்டுக்கு ஆற்றிலிருந்து, இரண்டு பர்லாங்கு தூரமிருக்கும். ஆகாசத்திலிருந்து இறங்கி வந்த இந்திரவிமானம் போல் அந்த நாரீமணியின் மந்திரம் சோபித்தது. அவள் சகிப்புடன் சற்று தூரம் நடந்து அங்கிருந்த சிலா ஆஸனத்திலுட்கார்ந்தாள். மனதில் அநேக எண்ணங்களுதித்தன. மனோன்மணி தன்னையறியாமலே துக்கித்தாள். விசாலமான லலாடத்தில் வியர்வைத்துளிகளிருந்தன. ஜோதிர்மயமான கண்கள் கருணா ரஸத்துடன் விளங்

† மேற்குத் திசை.

கின. தன்னைத்தானே தேற்றிக் கொண்டு உத்யானவனத்தில் உலாவலானாள். சேகரபுரத்துக்கும் ஸுந்தரியின் மந்திரத்துக்கும் ஒரு மைல் தூரமுண்டு. சேகரபுரம் விப்ரர்களாலும் வேளாளர்களாலும் நிறைந்திருந்தது. எங்கே பார்த்தாலும் நெற்பயிரும் கரும்பு வளர்ச்சியும், பச்சென்ற வாழைச் செடிகளும், கோமலமான மாமரங்களும், தென்னை, பலா, முதலிய விருக்ஷங்களும் காணப்பட்டன. நீர்ப்பாய்ச்சல் அதிகமாயிருந்ததால் ஸஸ்யவர்க்கங்கள் வளர்ச்சியாயிருந்தன. பிரஸித்தி பெற்ற நீலசண்டேசுவரரின் ஆலயமும், அதற்குச் சமீபத்தில் ஹேமாவதி நதியும் ஓடிக்கொண்டிருந்தது. அங்கங்கே சிறு குன்றுகளும், மண்டபங்களும் இருந்தன. ஹேமாவதி நதி அந்நாரீமணி இருந்த அரண்மனை வழியாய் ஓடிக்கொண்டிருந்தது. அப்பெண்யார்? அவள் என் அழவேண்டும்? அவளோடு யாருமில்லாதிருக்க வேண்டிய காரணமென்ன? இதையெல்லாம் பார்த்தால் ஆச்சரியமாயிருக்கிறது! ஒருவருடன் பழகினால் மட்டும் அவர்களின், விருத்தாந்தங்கள் தெரியும். மற்றபடி வேதாந்தம், சாஸ்திரம் ஜோதிஷம், ஞானதிருஷ்டி முதலியவைகளால் இக்காலத்தில் அறிந்து சொல்வது கஷ்டமாகும். நம்பவும் மாட்டார்கள். இவளென்ன பெண்ணு, மானவியா, மோகினியா, ஒன்றும் தெரியவில்லையே! ஒவ்வொரு அங்கத்திலும் யௌவன ரஸம் நிறைந்திருந்தது. கழுத்து பளபளவென்று பிரகாசிக்கும். அவள் கேசராசி சிரஸ்ஸிலிருந்து பூமிவரையில் ஒரே ஸமமாய் வளர்ந்து இடம் போதாததால் தரையில் புரண்டுகொண்டிருந்தது. அவள் வநதேவதையாய் விளங்கினாள். பசுக்கள் ஒன்றன்பின் ஒன்றாக அவள் தோட்டத்தில் நுழைந்தன. அவைகளின் கன்றுகள் மிருதுவான மயிருடனும் சரீர புஷ்டியுடனும் துள்ளித் துள்ளிக் குதித்தன. ஆரியாங்கனை அவைகளைக் கண்டு முகமலர்ந்து பிடித்துக் கொண்டாள். கன்றுகள் குதித்துக் குதித்து விளையாடவும், அங்கனையும் அவைகளுடன் ஆநந்தமாயோடவும், பார்ப்பவருக்கு ஆச்சர்யத்தை விளைத்தன.

சில நேரம் சென்றதும் 'மஹிஸுதா!' என்று ஒரு சப்தம் கேட்டது. பெண் திரும்பிப் பார்த்தாள். "மஞ்சரீ வந்தாயா" என்றாள். இருவரும் ஓரிடத்திலுட்கார்ந்து பேசலாயினர்.

மஞ்:—அம்மணீ உன் முகம் வாடியிருக்கிறதே, கண்ணீர் விட்டழுதாயோ!

மஹி:—அதெல்லாம் இருக்கட்டும்; நீ சென்ற விஷயம் என்னவாயிற்று?

மஞ்:—உன் தந்தை நாளையதினம் இங்கே வரப்போகிறாராம். ஆட்களெல்லாம் வழியை சுத்தப் படுத்துகின்றனர். தோரணம், பாவுடாக்கள் கட்டியிருக்கின்றன.

மஹி:—எதற்காக வருகிறார்? சிற்றன்னையும் வருகிறாளா? அவர்களெல்லாம் ஸுகமாயிருக்கிறார்களா?

மஞ்:—எல்லோரும் ஸுகம். சிற்றன்னை எப்பாடுபட்டாலது தன் தம்பிக்கு உங்களை விவாஹம் செய்து வைக்கும்படி மஹாராஜாவைக் கேட்கிறாள். மஹாராஜா அதற்காகவே வருகிறாரென்று சிலரால் அறிந்தேன்.

மஹி:—விவாஹமா? யாருக்கு? சிற்றன்னை ஸகோதரனை ரகுபதிசந்தனுக்கு நானா ஏற்றவள்? ரகுபதி விரும்பினால் பத்மினிஜாதிப் பெண்களும், மஹாராஜாக்களின் குமாரிகளும் கிடைப்பார்களே! குரூபியும் குணமற்றவளுமான என்னை ஒரு நாளும் விரும்பாரென்று சின்னம்மா சொன்னதை மறந்துபோய்விட்டாளோ?

மஞ்:—உன் தாய் இப்போதிருப்பாளாயின் எத்தனை ஸந்தோஷப்படுவாளோ! அவளுக்கு பூலோகவாஸத்தி லிருக்க மனமில்லாமல் மறைந்தாள். ரகுபதிசந்த் அடிக்கடி சிங்காரித்துக் கொண்டு ஆடம்பர அட்டஹாஸத்துடன் மீசையை முறுக்கிக் கொள்ளுகிறார். நாளைய தினம் வருவார்.

மஹி:—வேறு விசேஷங்களுண்டா? அரண்மனையில் எல்லோரும் ஸௌக்யமா? என்னைப் பற்றியாராவது விசாரித்தார்களா? தந்தைக்கு விவாக விஷயத்தில் பூர்ணஸம்மதமிருக்கிறதா?

இதை யெல்லாம் நீயறிந்ததெப்படி? விவரமாய்ச்சொல்.

மஞ்:—தந்தையின் மன்தை சோதித்தறிவது கஷ்டம். அவர் மனைவியின் பேச்சை சில ஸமயத்தில் அசட்டை செய்வதாயும் தெரிகிறது. சிற்றன்னை துர்முகிரூபம் கொண்டால் அப்போது தலையை யசைத்து ஸரியென்கிறார்.

மஹீ:—மஞ்சரீ! எது எவ்விதமானாலென்ன! என்னை பகவான் உலகத்தில்வைத்திருப்பது அன்யாயம். கஷ்டத்துக் கென்றே நான் தோன்றியிருக்கிறேன். தந்தையின் வருத்தமும், சிற்றன்னையின் கோபமும், அவள் பந்துக்களின் வெறுப்பும், ஏகாந்த வாஸமும், என்னொருவள் விஷயத்தில் ஸம்பவித்திருக்கின்றன. இதென்ன பிழைப்பு!

மஞ்:—அம்மணீ, மனந்தளராதே! வருத்த முற்றால் தேறுதல் சொல்பவர்யார்? தைர்யமே பிரதானம், உனக்கு ஈசுவரன் ஒரு போதும் குறை செய்யார். எதுவும் நன்மையாகும். சிந்திப்பதில் ஒன்று மில்லை. ஸமயத்தில் தக்க புத்தியை உபயோகிக்கவேண்டும்.

மஹீ:—வருகிறதை அனுபவிக்கத் தயாராயிருக்கிறேன். தந்தையின் கோபம் வந்தாலும், சாபம் வந்தாலும் பயப்படேன். நூறு சிற்றன்னைகள் ஏககாலத்தில் ஆகாயத்திலிருந்து குதித்தாலும் நான் அவள் சொல்லுக்கு இணங்கேன். ஒருவருக்காக தர்ம மார்க்கத்தை விட்டுவிடுவார்களா! என் தந்தைக்கு பத்தியில்லாத துக்கத்துக்காக ஹீனஜாதியாளை மணந்துகொள்ள நேரிட்டது. நான் எதற்காக ஹீனவரனை அடையவேண்டுமோ? வெகு நன்றாயிருக்கிறது! அழகைப்பார்த்து ஏமாந்து போவதற்கு நானென்ன மூடமா! ரகுபதிசந்துக்கு சக்ரவர்த்தி பட்டம் வந்தாலும் அவனை விவாஹம் செய்ய என்மனம் ஒப்பாது. இது ஸத்யம். நாளையதினம் என் தந்தைக்குக் கடைசியாகச் சொல்லப் போகிறேன். என்ன வந்தாலும் வரட்டும். அடிக்கடி அவர்கள் மனப்பால் குடிப்பானேன்.

மஞ்:—பெண்ஜன்மத்துக்கென்றே இவ்வித ஸங்கடங்கள் உதிக்கின்றனபோலும். மஹீஸுதா, குலஹீனனும், குணசூன்யனும், ஸ்திரீலோலனுமான ரகுபதிசந்தா உனக்கு பர்த்தார்யனாவான். சி! சி! ஒருநாளுமில்லை. நீலகண்டேசுவரர் உனக்கு வரனை ஸிருஷ்டித்திருப்பார். தக்க காலத்தில் உன்னை தர்மபத்நியாய்க்கொள்ள வீரபுருஷன் வந்து சேருவான். பயப்படாதே! எழுந்திரு, தேவாலயம் செல்வோம். ஜனசந்தடி அடங்கிவிட்டது. இரவு வந்து எத்தனை நேரமாயிற்று! மஹீஸுதா, நானில்லாதவேளையில் ஆதியில் நடந்த ஸங்கதிகளை நினைத்து துக்கித்திருப்பாய், இனி சிந்தையை விடு.

மஹீஸுதை மஞ்சரியின் தோள்மீது சாய்ந்து "அன்புள்ள மஞ்சரீ! நீ இல்லாவிட்டால் நான் உலகத்தி லிருந்திருக்க மாட்டேன்; எனக்காகவே உன்னை பகவான் ஏற்படுத்தியிருக்கிறார். காலவித்தியாஸத்தைப் பார்த்தாயா! அறுபது வயதுள்ள என்தந்தை மறுவிவாகம் செய்துகொண்டதால் ஸ்வபுத்தியைப் போக்கடித்து அன்யருபதேசத்துக்குட்பட்டு செய்யத்தகாத காரியங்களைச் செய்கிறாரென்று கண்ணீர்விட்டழுதாள். மஞ்சரி கரவஸ்திரத்தால் கண்ணீரைத்துடைத்து ஸமாதானப்படுத்தினாள்.

---

## 2-ம் பரிச்சேதம்.

ஸாரங்கபுரியில் அமரஸிம்ஹன் அரசாண்டு வந்தான். அவன் தீரபுருஷன். லக்ஷணமுள்ளவன். தார்மிகன். ஸத்யசீலன். ஸத்குணி. மகாராஜாவுக்குள்ள லக்ஷணங்களெல்லாம் அவனிடம் அமைந்திருந்தன. அன்னிய தேசத்தரசர்கள் அமரஸிம்ஹனுக்கு கப்பங்கட்டிவந்தனர். பிரஜைகளெல்லாம் அமரஸிம்ஹனுடைய கையில் கஷ்டமென்பதைக் கனவிலும் நினையாமல் வாழ்ந்தார்கள். அமரஸிம்ஹனுக்கு வித்யாதரி என்ற மனைவி யிருந்தாள். வித்யாதரி உத்தமஸ்திரீகளின் குணரூபாக்கியங்களை யெல்லாம் பெற்றிருந்தாள். பாதிவிரத்யமே பூஷணமென்

றும், பதியே தெய்வமென்றும், பதியின் வார்த்தைகளே தர்மோபதேசங்களென்றும், நினைத்து நித்யவிரதமாய் நடத்திவந்தாள். மகாராஜாவுக்கு வித்யாதரி இருந்தவரை யாதொரு கஷ்ட நஷ்டங்களும் அணுகாமலிருந்தன. பட்டத்துக்குப் பிள்ளையில்லையே யென்று அமரஸிம்ஹன் வருந்தும் போதெல்லாம் வித்யாதரி தன் புருஷனுக்காகவாவது பகவான் மனமிரங்கி சந்தானத்தைக் கொடுக்கவேண்டுமென்று பிரார்த்திப்பாள். ஈசுவரகிருபையால் வித்யாதரிக்கு ஒரு கன்யாரத்நம் ஜெனித்தது. அமரஸிம்ஹன் மனம்பூரித்தது. குமாரிக்கு மஹீஸுதையென்று பெயரிட்டான். மஹீஸுதை தாயைப்போல் ஸுந்தரவதியாயும், தந்தையைப் போல் வீரரஸமுள்ளவளாயும் வளர்ந்தாள். அமரஸிம்ஹன் மஹீஸுதைக்கு ஸகல வித்தைகளையும் கற்றுவைத்தான். மகாபுத்திசாலியான மஹீஸுதை சிரமமில்லாமலே எல்லாவித்தையிலும் தேறினாள். ஸங்கீதத்தில் அவள் பாண்டித்யம்பெற்றாள். எதைப் பார்த்தாலும் கவனம் கட்டுவாள். வீணையில் ஜயலக்ஷ்மிதாண்டவமாடுவது போல் ஸமயத்துக்குத் தக்கவாறு வாசிப்பாள். ஸம்ஸ்கிருத சுலோகங்களுக்கு வியாகரணம்தவறாமல் அர்த்தமுரைப்பாள். ஒருமுறை பேசவாரம்பித்தால் முடியும்வரை அவள் வாயைப் பார்த்துக் கொண்டே ஜனங்கள் நிற்பார்கள். மிருதுபாஷையும் சாந்தகுணமும், தெய்வ பக்தியும், அவளிடம் விளங்கின. மஹீஸுதையின் வளர்ச்சியைக் கண்டு வித்யாதரி சந்திரனைக் கண்ட ஸாகரம்போல்பொங்கினாள். மாதாவுக்கு ஸமான வஸ்து உலகத்தில் எங்கேயுண்டு! வித்யாதரி மகாபுண்யவதியென்று ஜனங்கள் சொல்லிக் கொண்டாடினார்கள். அமரஸிம்ஹன் ஆநந்தத்துக்கு அளவில்லை. வித்யாதரியின்கதை உலகத்தில் வெகுதினங்கள் நீடித்திருக்கவில்லை. மஹீஸுதையின் பதினாலாவது வயதில் வித்யாதரி மற்றொரு கர்ப்பம் தரித்திருந்தாள். அது சிதைவுண்டு ஜன்னிகண்டு வித்யாதரி விண்ணுலகம் சென்றாள். மாதாவின் வியோகத்தால் மஹீஸுதை அடங்காத்துயரங்கொண்டாள். அமரஸிம்ஹன் பத்நியின் மரணத்தைச் சகியாமல் துக்கித்தான். மஹீஸுதையைத் தவிர அவன் க்ஷேமத்தைக் கோருகிறவர்கள் யாருமில்லை. தாயிழந்து புலம்பும் தன் புதல்வியைத்தேற்றி அவளை முன்னிலும் பதின்மடங்கதிகமாய்ப் பரிபாலித்துவந்தான். இரண்டொரு வருஷங்களானதும் ஒரு சிற்றரசன் பெண் ரூபவதியாயிருக்கிறாளென்று கேள்வியுற்று அமரஸிம்ஹன் அவளைப் பார்த்து விவாஹமும் செய்துகொண்டான். அவள் பெயர் அம்பிகா. அதிசீக்கிரத்தில் அம்பிகை தன்னதிகார ஆடம்பரங்களை ஸாரங்கபுரி அரண்மனையில் நடத்தினாள். மகாராணியென்ற கர்வம் நிமிஷத்துக்கு நிமிஷம் அதிகரித்து வந்தது. ஸர்வாதிகாரியானாள். மஹீஸுதைக்குள்ள மரியாதைகளைப் பார்க்க அம்பிகைக்கு இஷ்டமில்லை. சீக்கிரத்தில் அவளைத் தாழ்த்தவெண்ணினாள். அமரஸிம்ஹனை வசியப்படுத்தவெண்ணினாள். அவன் அர்ப புத்தியுள்ளவனல்ல. ஏதோ கர்மவசத்தால் கல்யாணமாயிற்றென்றாலும் அம்பிகையின் மனப்படியெல்லாம் அவன் கூத்தாட மாட்டான். மஹீஸுதைக்குத்தனியான அரண்மனையிருந்தது. அவளுக்கு தாஸ தாஸிகள் பரிஜனங்களெல்லாமிருந்தன. காலையிலும் மாலையிலும் தந்தை மகளைப்பார்க்க வருவார். அவளை வெகு பக்ஷமாய் வளர்த்துவந்தார். அம்பிகைக்குப் பொறாமை அதிகரித்தது. அநேக உபாயங்களைச்செய்தாள். ஒன்றும் நிறைவேறவில்லை. தன் ஸஹோதரனுக்கு மஹீஸுதையை விவாகம் செய்துகொடுக்குமாறு அமரசிம்ஹனிடம் ஏற்பாடுசெய்தாள். அமரஸிம்ஹனுக்கு மகத்தான கோபமுண்டாயிற்று. அம்பிகையைக் கடிந்துகொண்டான். ஆனால் அம்பிகை செய்யும் பணிவிடைக்கு மனமகிழ்ந்து சில ஸமயங்களில் அவள் வார்த்தைகளை நிறைவேற்றிவிடுவான். அம்பிகை வயதுவந்த பெண்ணை அடிக்கடி தாங்கள் போய்ப்பார்ப்பது பிறர் குறை கூற இடமாகும். இரண்டாங்கல்யாணம் எதற்காகச் செய்துகொண்டான்! ஸ்திரீலோலனென்று வாய்க்கு வந்தபடி உளறுகிறார்கள். தாம்

கள் வயதுவந்த பெண்ணை அடிக்கடி பார்க்கச் செல்வது வம்புக்கிடமாய் விட்டது என்று போதித்தாள். இவ்விதமே ஒவ்வொரு ஸந்தர்ப்பத்திலும் தன் போதனையால் அரசனை வச்யப்படுத்திக்கொண்டாள். மஹீஸுதைக்கு அம்பிகையின் குயுக்திகள் தெரிந்தன. முன்போல் தகப்பன் தன்னிடம் பிரியமில்லாததைக் கண்டு துக்கித்தாள். சிற்றன்னை அடிக்கடி இவள் அரண்மனைக்கு வருகிறது வழக்கம். மஹீஸுதைக்கு புத்தி யுரைப்பதுபோல் சில வார்த்தைகளைச் சொல்வாள். யௌவன ஸ்திரீகள் விவாஹமில்லாமலிருப்பது பிசகாய் முடியும். உன் தந்தையிடம் சொல்லி கூடிய சீக்கிரத்தில் வரனைத்தேடி கல்யாணம் முடிக்கிறேன் என்பாள். மஹீஸுதை வீணை வாசித்தால் என்ன இழவு எப்போது பார்த்தாலும் லொட்டுலொட்டென்ற ஓசை! விவாக மில்லாதவள் எந்த ஸுகத்துக்காக வீணைவாசிக்கிறாள்! இனிமேல் கூடாதென்று நிறுத்திவிட வேண்டும் என்று கட்டளையிடுவாள். ஆடம்பரம் அலங்காரம் ஸங்கீத ஸாஹித்யங்களையெல்லாம் சீக்கிரத்தில் ஒழித்தாள். அம்பிகையின் கொடுமை ஸகிக்க முடியவில்லை. மஹீஸுதைக்கு சிற்றன்னையின்மேல் கோபமில்லை. அறியாத்தனத்தால் இவ்விதம் செய்கிறாளென்று அவளுக்காக பச்சாதாபப் படலானாள். அம்பிகை மஹீஸுதை தன் அதிகாரத்துக் குட்பட்டு நடக்கிறாளா இல்லையாவென்று அடிக்கடி கவனிப்பாள். விவேகசாலியான ராஜகுமாரி அம்பிகையின் வார்த்தையைத் தள்ளாமல் ஒவ்வொரு காரியமும் நடத்திவந்தாள். அம்பிகையின் மனம் அத்துடன் சாந்தமாயிற்று! ராஜகன்னிகையின் பொறுமையைக்கண்டு பொறுமைகொண்டாள். அமரஸிம்ஹன் மகளுக்கு விவாஹம் செய்வதில் கவலைப்படவில்லை யென்றறிந்து, அடிக்கடி, ரகுபதிசந்துக்கு மஹீஸுதையைக் கொடுப்பது நலமென்று போதித்தாள். மஹீஸுதையின் நல்லகாலமே அமரஸிம்ஹனை 'அவ்விஷயத்தில் பிரவேசிக்காமற் செய்தது.' சில தினங்கள் கழிந்த பிறகு அதைப்பற்றி யோசிக்கலாமென்று மனைவிக்குச் சொல்லிவிட்டான்.

இப்போது ரகுபதி சந்த் அரண்மனையோடு வந்திருக்கிறான். தன் ஸஹோதரியின் தைர்யத்தால் அடிக்கடி மஹீஸுதையின் விடுதிக்குப் போகலானான். ஆரம்பத்தில அஞ்சினாலும் நாளடைவில் தாராளமாய் நடந்தான். மஹீஸுதை எவ்விதத்திலும் தன்னையே யடைவாள் என்ற நிச்சயம் அவனுக்கிருந்தது. அவள் ஸகி மஞ்சரியோடு பேசுவான். அவள் மூலமாய் மஹீஸுதையின் மனோபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்ள முயன்றான். இராஜகுமாரியின் விவேகத்துக்குப் பிரதிபிம்பம்போல் மஞ்சரி அமைந்திருந்தாள். அவள் சதுரையானதால் ரகுபதிசந்தோடு ஸமயானுஸாரமாய்ப்பேசி 'மஹீஸுதையின்' விஷயத்தில் அவனுக்குள்ள எண்ணத்தை அறிந்துகொண்டாள். ஒருநாள் ரகுபதிசந்து மஹீஸுதையின் அரண்மனையில் தாராளமாய் ஸஞ்சரித்த போது மஞ்சரி இராஜகுமாரியிருக்கு மிடத்தில் நீர் அடிக்கடி வரக்கூடாதென்றாள். அவள் வார்த்தைக்கு அவன்கோபங்கொண்டு நாளையதினம் என் அதிகாரத்துக்குட்பட்டு அடிமை போல் நடக்கவேண்டியவளாயிருக்கிறாள்: நான் இப்போது வருவதற்கு யாருடைய ஆக்ஷேபமும் செல்லாது. இனி எப்போதாவது இவ்விதம் சொல்வாயாகில் தக்க சிக்ஷையடைவா யென்றான். மஞ்சரி மிகுந்தகோபத்துடன் கன்யாஸ்திரீயிருக்கும் மந்திரத்தில் நீ வரக்கூடாதென்றால் ஏதேதோபிதற்றுகிறாய்! இனிமேல் இவ்விதம் பேசுவாயாகில் தகுந்த பலன் கிடைக்கும்! ஓடிப்போவென்றாள். ரகுபதிசந்து தனியாயிருந்ததால் மஞ்சரியின் கோபத்தைக் கண்டு பயந்தோடினான். தன் ஸஹோதரியிடம் இச்சங்கதிகளைத் தெரிவித்தான். அவளுக்கு ஆக்ரஹமுண்டாயிற்று. எவ்விதத்திலும் மஹீஸுதையை தன் சகோதரனுக்கு விவாகம் செய்தே தீருவேனென்று கங்கணம் கட்டிக்கொண்டாள்.

அமரஸிம்ஹனிடம் சொன்னால் அவன்

மஹீஸுதையின் கல்யாணம் இப்போது முடியாதென்கிறான். என்ன செய்கிறது! மஹீஸுதையை நல்ல வார்த்தைகளால் வசியப்படுத்தலாமென்றெண்ணினாள். பட்டத்துக்கு புத்திரனில்லாததால் மஹீஸுதையின் கர்ப்பத்திலுதிக்கும் புதல்வனுக்கே ராஜ்யம் கிடைக்கும். அப்போது தனக்கு யாதொரு பாத்யமுமிராது. ரகுபதி சந்துக்கு அவளை மணந்துவிட்டால் ராஜ்யம் யாருக்கும்போகாது அமரஸிம்ஹன் இதற்கு ஸம்மதிக்கவில்லை. அவன் சிரேஷ்டனான வரனைத் தேடுகிறான். மஹீஸுதையைப் போல் ரூபவதிக்கு உத்தம வரன் கிடைப்பது கஷ்டமல்ல. அவள் குணம், புத்தி வித்தை முதலியவைகளில் தேர்ச்சியடைந்திருக்கிறாள், அவளிடம் நான் எவ்விதமுரைப்பேன்— என்று யோசனை செய்து அடிக்கடி பெண்ணின் அந்தப்புரத்துக்குப் போகத்தலைப்பட்டாள். அவளோடு பேசுவதும், நல்லவள் போல் நடிப்பதும், விவாஹ விஷயத்தில் மனம் செல்லும்படி போதிப்பதும், பெண்களிருக்க வேண்டிய கடமைகளை எடுத்தோதுவதுமாயிருந்தாள். விநயத்திலும் சாந்தத்திலும் மரியாதையிலும் மஹீஸுதைக்கு நிகர் யாருமில்லையென்று சொல்லும்படி சிற்றன்னை கூறும் சொற்களை வெகு கவனமாய்க் கேட்பாள். அவளைத் தாயென்றே மதித்து பக்தி செய்தாள். அம்பிகையின் ஸஹோதரனை மணந்துகொள்வது மஹீஸுதைக்கு இஷ்டமில்லை. அந்த பிரஸ்தாபம்வந்தபோதெல்லாம் 'அம்மணீ உலக ஸம்பந்தத்தால் துக்கமுண்டாகும். நித்யாநந்தத்தையடையப் பிரயாஸைப்படவேண்டும். ஆத்மார்த்தமான காரியங்களைச்செய்வதில் மட்டும் என் மனம் ஸந்தோஷப்படுகிறது. இகலோக பாக்யங்களில் எனக்குக் கிஞ்சிற்றும் விருப்பமில்லை. தோற்றப்படுவதெல்லாம் அழியும். அழியாப்பொருளை நான் தேடுகிறேன். தாயே இனிமேல் கல்யாணத்தைப்பற்றி தாங்கள் பேசாதிருக்கும்படி விநயமாய்க் கேட்டுக்கொள்ளுகிறேனென்று நமஸ்கரித்தாள். அம்பிகைக்கு மனம் கொதித்தது. அவள் சீறி என்னடீ வேதாந்தம்பேசுகிறாய்! இந்த அற்பத்தை லக்ஷியம் பண்ணினது என்மேல் குற்றம். நல்லதிருக்கட்டும்! என்று எழுந்துபோய்விட்டாள்.

மஹீஸுதை அம்பிகையின் கோபத்தை ஒரு பொருட்டா எண்ணவில்லை. அவள் தன் பாடங்களைக் கவனித்தாள். அம்பிகை அமரஸிம்ஹனோடு " மஹீஸுதைக்கு பைத்யம்பிடித்தது: அவள் சீக்கிரத்தில் காமாவேசங்கொண்டோடிவிடுவாள். எனக்கு பயமாயிருக்கிறது. துரிதத்தில் அபவாதம் வந்துவிடும். நீங்கள் தக்க முயற்சி எடுத்துக்கொள்ளாவிட்டால் நான் தற்கொலை செய்துகொள்வேன்" என்று கண்ணீர் பெருக மாயவேஷம் போட்டாள். அமரஸிம்ஹன், பெண்ணைப்பற்றி அம்பிகை சொன்னவுடன் தத்க்ஷணமே மஹீஸுதையின் அரண்மனைக்குச்சென்றான். தந்தையின் வரவைக்கண்ட குமாரி நமஸ்கரித்துநின்றாள். அமரஸிம்ஹன் கிருபாதிருஷ்டியுடன் அவளைப் பார்த்து ஆசிர்வதித்து சில கேள்விகளைக்கேட்டான். மறுமொழி ஸரியாய்வரக்கண்டு அம்பிகையின் கிருத்திரமமென்றறிந்தான். அவன் மனதில் ஒரு யோசனையுண்டாயிற்று. புத்திரியை நோக்கி வத்ஸே நீ உன் தோழியுடன் சேகரபுரத்திலுள்ள உன் தாய் வஸித்த வித்யாதரி விலாஸத்தில் சிலநாளிருக்கிறாயா வென்று கேட்டான். மஹீஸுதைக்கு அடங்காச் சந்தோஷமுண்டாயிற்று. அப்பா மஞ்சரியோடு நான் அங்கே உத்ஸாஹமாய் காலங்கழிக்கிறேன். உத்தரவு கொடுங்களென்றாள். அமரஸிம்ஹன் சேனைகளோடு மஹீஸுதையை வித்யாதரி விலாஸத்துக்கனுப்பினான். மஹீஸுதைக்கு தந்தைசெய்த ஏற்பாட்டால் தொந்திரவுநீங்கிற்றென்று மனமகிழ்ச்சியுண்டாய் மஞ்சரியோடு விநோதமாய்க்காலம் கழித்தாள்.

## A CATECHISM OF THE BHAGAVAD-GITA.

ஸ்ரீ கிருஷ்ணாய நம:

# ஸ்ரீபகவத்கீதை வினாவிடை

(சிறுவர்களுக்குபயோகமாக எழுதப்பட்டது.)

IV.

1. ஸ்ரீபகவான் அருச்சுனனுக்கு உபதேசித்த இந்த சாங்க்ய யோகமும் கர்மயோகமும் அதற்குமுன் யாவர்க்காயினும் உபதேசிக்கப் பட்டதுண்டோ?

உண்டு. இந்த யோகங்களை ஸ்ரீபகவான் முதலில் சூரியனுக்கு உபதேசிக்க, சூரியன் அவன் புத்திரனாகிய மநுவுக்கும், மநு அவன் புத்திரனாகிய இக்ஷ்வாகுவுக்கும் முறையே உபதேசித்தார்கள். இவ்வாறு இவை ஒருவர்பின் ஒருவராக அநேக ராஜ ரிஷிகளுக்கு உபதேசிக்கப்பட்டு, லோகத்தில் பெரியோர்களால் அறியப்பட்டிருந்தன. இந்த முக்தி சாதனமான யோகங்கள் பின்பு வெகு நாட்செல்லுகையால் பலகாரணங்களாலும் உபதேசிப்பவரும் கற்றுக்கொள்பவரும் இல்லாமல் முடிவில் ஒருவர்க்கும் தெரியாமலே போய்விட்டன. இப்போது அவற்றை அருச்சுனனுக்கு ஸ்ரீபகவான் மறுபடியும் லோகோபகாரமாக உபதேசித்தருளினர்.

2. ஸ்ரீபகவான் இந்த கிருஷ்ணாவதாரத்தில் சூரியனுக்கு உபதேசித்தாரென்று கொள்ளக் கூடாதாதலினாலே, முன்னொரு அவதாரத்தில் உபதேசித் திருக்க வேண்டும். ஆகையினாலே ஸ்ரீ பகவான் எங்கெந்தக்காலங்களில் எதற்காக எவ்வாறு அவதரிக்கிறார்?

உலகமானது நீர்ப்பெருக்குப்போலே இடையறாமல் அநாதியாகத் தொடர்ந்து வருதலினாலே, லோகோபகாரமாக ஸ்ரீ பகவான் அநேக அவதாரங்களை எடுத்திருக்கிறார். மநுஷ்யராகிய நமக்கு எப்படியோ அப்படியே ஸ்ரீ பகவானுக்கும் அநேக ஜன்மங்கள் ஆயிருக்கின்றன. ஆயினும், நமக்குப் பூர்வ ஜன்மஞானம் சிறிதும் இல்லை. ஸ்ரீ பகவான் சர்வஜ்ஞராதலினாலே அவர் முன்பிறப்புகள் எல்லாவற்றையும் அறிவார். அன்றியும் ஸ்ரீ பகவானுடைய ஜன்மங்கள் நம்முடைய ஜன்மங்களைப்போல கர்ம வசத்தால் உண்டாதல் இல்லை. லோகாநுக்ரகத்தின் பொருட்டு மாயையினால் சுதந்திரமாக இச்சைப்படி எடுக்கப்படுகின்றன. எங்கெந்தக் காலங்களில் தர்மத்துக்குக் குறைவும் அதர்மத்துக்கு அபிவிர்த்தியும் உண்டாகின்றனவோ அந்தந்தக் காலங்களில் அதர்மத்தை நீக்கி தர்மத்தை நிலைநிறுத்தும் பொருட்டும், துஷ்டர்களை நிக்ரகித்துச் சிஷ்டர்களைப் பரிபாலித்தற் காகவும் ஒவ்வொரு யுகத்திலும் ஸ்ரீ பகவான் அவதரிக்கின்றார். ஆகையினாலே ஸ்ரீ பகவானுடைய அவதாரங்களைக் கேவலம் மனுஷ்யப் பிறப்புப்போல எண்ணாமல் அநுக்ரகார்த்தமாக எடுக்கப்படு மென்று எண்ண வேண்டும்.

3. ஸ்ரீபகவான் இப்படி அநேக அவதாரங்களையெடுத்து அநேக கார்யங்களைச் செய்யின் அவருக்குக் கர்மநாதம் உண்டாகாதோ?

உண்டாகாது. ஏனெனில், ஸ்ரீ பகவான் செய்யும் கார்யங்களெல்லாம் தமக்கொரு பிரயோசனத்தைக் கருதாமல் லோகாநுக்ரகத்தின் பொருட்டே, விருப்பு வெறுப்பு இல்லாமல் செய்யப்படுதலினாலே அக்கர்மங்கள் அவரைப் பாதிக்கமாட்டா. எப்படி யென்னில், நியாயாதிபதி ஒருவன் நியாய விசாரணை செய்து, கொலை முதலிய குற்றம் செய்தவர்களைத் தூக்கிலிட்டுக்கொல்லல் முதலான தண்டனைகள் விதித்துச் சிட்சிக்கினும் அதனால் அவனை ஒரு தோஷமும் சாராததுபோல என்றறிக. ஸ்ரீ பகவான் அவரவர்கள் கர்மங்களுக்குத் தக்கபடி மனிதரை நால்வகைச் சாதிகளாலும் பிறக்கச்செய்து அவரவர் கர்மங்களுக்குத் தக்க பலன்களைக் கொடுப்பினும் அவருக்கு அகங்காரமும் பலாபேக்ஷையும் இல்லாமையினாலே அக்கர்மங்கள் அவனைப் பந்தித்தல் இல்லை,

4. கர்மமாவது யாது? விகர்மம் என்றால் என்ன? அகர்மமாவது யாது?

இவற்றில் நின்றும் ஒருவன் நீங்குவ் தெப்படி?

கர்மங்களாவன, வேதசாஸ்திரங்களில் அவரவர் வர்ணாசிரமங்களுக்குத் தக்கபடி வெவ்வேருகச் செய்பத்தக்கவையென்று விதிக்கப்பட்ட காரியங்களாம்; விகர்மமாவன, அவ்வாறே செய்யத்தகாதவையென்று விலக்கப்பட்ட செய்கைகளாம்; அகர்மமாவது யாதொரு செய்கையு மில்லாமல் செயலொழிந்திருப்பதாம். இம்மூவகையான கார்யங்களும் தேக இந்திரியங்களுக்கேயன்றி நிர்விகாரமாகிய ஆத்மாவுக்கு இல்லவேயில்லை. எவன் இவ்வுண்மையை அறிந்து பலாபேக்ஷையை விட்டுத் தனக்கு விதிக்கப்பட்ட காரியங்களாகச் செய்கின்றானோ அவன் கர்மபந்தத்தை அடையமாட்டான்.

5. இவ்வாறு ஆத்மாவுக்குக் கர்மமும் கர்மபந்தமும் இல்லையென்று நிச்சயமாக அறிந்தவன் எப்படி யிருப்பான்? யாது பயனை அடைவான்?

இந்த மேலான ஞானத்தைப் பெற்றவன் கார்யத்திலும் பலாபேக்ஷயும் சங்கற்பமும் கொள்ளமாட்டான். எப்போதும் திருப்தியடைந்து ஒருவரையும் ஆசிரயிக்காமல் சுதந்திரனாயிருப்பான். தேக மனேந்திரியங்களை வசப்படுத்தி எல்லா உடைமைகளையும் விட்டொழிந்து தேகம் நிற்றற்குவேண்டிய அத்யாவச்யமான சில காரியங்களைமட்டும் செய்துகொண்டிருப்பான். யதேச்சையாகக் கிடைக்கும் பொருளால் சந்துஷ்டியடைந்து சுகதுக்கங்களால் மனம் சலியாமல் பொறாமை நீங்கி எல்லாவிடத்திலும் ஒரு தன்மையாக விருப்பான். நான், எனது என்னும் இருவகையானைபற்றும் நீங்கி ஜீவன்முக்தனாய் ஆத்மஞானத்தில் நிலைபெற்றவனாய் ஈசுவரார்ப்பணமாகக் கர்மங்களைச் செய்து கொண்டிருப்பான். இப்படியிருக்கும் ஞானி எவ்வகையான காரியங்களைச் செய்த போதிலும் அவனுக்குக் கர்மபந்தமும் பாவமும் துன்பமும் இல்லை. இந்த ஞானத்தில் நிலை பெற்றிருப்பவன் ஞானயஜ்ஞத்தைச் செய்பவனாகச் சொல்லப்படுவான். இந்தஞான யஜ்ஞம் வேறு பலவிதமான யஜ்ஞங்களிலும் மேலானது.

6. வேறு பலவிதமான யஜ்ஞங்கள் எவை?

(a). தெய்வயஜ்ஞம். அதாவது தேவர்களுக்குத் திருப்தி யுண்டாகும்படி வேத விதிப்படிச் செய்யப்படும் பசுபந்தம், அசுவமேதம் முதலான யாகங்கள். இவற்றால் தேவர்களை மகிழ்வித்து அவர்களிடத்திலிருந்து மழை முதலான வளங்களைப்பெறலாம்.

(b) இந்திரியநிக்ரகமாகிய யஜ்ஞம். அதாவது, மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் ஐந்து இந்திரியங்களையும் விஷயங்களில் போக்காமல் தடுத்து வசப் படுத்துதல். இது தியான யோகத்துக்கு இன்றியமையாத தாதலினாலே இதுவும் ஒரு யஜ்ஞகர்மமாகக் கூறப்படும்.

(c) சப்தாதி விஷயங்களை இந்திரியங்களில் செலுத்தல். அதாவது சப்தாதி விஷயங்களில் நின்றும் இந்திரியங்களை மீட்டு அவற்றைச் செல்லத்தக்க நெறியில் செலுத்துதல். இதுவும் மனோநிக்ரகத்துக்கு இன்றியமையாதது.

(d) மனோநிக்ரகமாகிய யஜ்ஞம். அதாவது இந்திரிய வியாபாரங்களைத் தடுத்து சுவாசபந்தனம் செய்து அதனால் சதா ஓடிக்கொண்டிருக்கும் மனசைப்புறப் பொருள்களிலே ஓடவிடாமல் ஆத்மத்யானத்திலே நிறுத்துதல். இதனால் சித்த சுத்தி பெற்று ஆசைகள் நீங்கிப்பேரின்பத்தை அடையலாகும்.

(e) இவைதவிர, தானம் கொடுத்தல், தவம் செய்தல், யோகாப்யாசம் செய்தல், ஞானசாஸ்திரங்களைக் கற்றல், ஞானத்தை அடைதல், பிராணாயாமம்செய்தல் இவையெல்லாம் சற்காரியங்களே யாதலினாலும் முக்தி சாதனமாதலினாலும் பலவகையான யஞ்ஞங்களாகவே கூறப்படும்.

இவ்வாறு எஜ்ஞங்கள் பலவகைப்படும். இந்த எஜ்ஞங்களில் எதையாயினும் ஒன்றைச் செய்து வருபவர்கள் நாளடைவில் ஞானத்தைப்பெற்று பிரஹ்மகைவல்யத்தைப்பெறுவார்கள். யஜ்ஞம் செய்யாதவர்களுக்கு இம்மையிலும் நன்மையில்லை, மறுமையிலும் நன்மையில்லை.

7. எல்லா யஜ்ஞங்களிலும் ஞான யெஜ்ஞம் ஏன் மேலானதாகச்சொல்லப்படுகின்றது?

மற்ற யஜ்ஞங்களைத் தனித்தனிச்செய்து பெறும் பலன்களை எல்லாவற்றையும் ஒருங்கே அவற்றினும் பல்லாயிரம் மடங்காக ஞானத்தால் ஒருவன் பெறக்கூடும். எதுபோலென்னில், கிணறு முதலான சிறிய நீர் நிலைகளினல் ஒருவன் ஸ்நான பானுதிகளுக்கு அடையும் பிரயோசனம் எல்லாவற்றையும் ஓர் பெரிய ஏரியினுலும் பெறக்கூடியது போல வேத கர்மங்களைச் செய்து அடையும் பயன்கள் எல்லாவற்றையும் பிரமநிஷ்டனுன ஒருவன் தன் ஞானத்தினல் அடையக்கூடும்.

8, இந்த ஞானத்தை ஒருவன் எவ்வாறு பெறுவது?

கர்மங்களைச் செய்து சித்த சுத்தியைப் பெற்ற ஒருவனுக்கு நித்யாநித்தியவஸ்துவிவேகம் முதலான சாதன சதுஷ்டயங்களும் உண்டாக அதன் பின் சற்குருவை யடைந்து அவரைச் சேவித்து அவருடைய அருளுக்குப் பாத்திரனுகி அவரால் உபதேசிக்கப் பெறவேண்டும்.

9. இந்த ஞானத்தால் ஒருவன் அடையும் பயனென்ன ?

தானல்லாத தேகத்தையும் தனதல்லாத மனைவி மக்கள் சுற்றம் பொருள் முதலானவற்றையும் தானுகவும் தனதாகவும் எண்ணிவந்த மோகம்நீங்கி, சர்வஜீவன்களும் தானும் ஈசுவரனும் அபேதம் என்கிற அறிவுண்டாகப் பெற்று, அதனல் பாவங்களெல்லாம் நீங்கப்பெறுவான். ஞானத்தைப் போலப் பாவங்களைநீக்கிப் பரிசுத்தமாக்கவல்ல சாதனம் வேறென்று மில்லை. இந்த ஞானத்தால் பின்பு மோக்ஷத்தையும் பெறுவான்.

## "FREE FROM BONDS."

(THE AUTOBIOGRAPHY OF A TALUQ GUMASTAH)

## * அவிழ்த்துவிட்ட கழுதை

(028-வது பக்கத்தொடர்ச்சி)

மறுநாள் மொழிபெயர்க்கும் பாடத்துக்கு ஒரு புதிய வாத்தியார் வந்தார். அவர் புதிதாய் பி. ஏ. பட்டம் பெற்று எம். ஏ. பரீக்ஷைக்குப் படித்துக்கொண்டிருந்தார். வயதில் சிறு பிள்ளைதான். நடராஜனைக்காட்டிலும் நாலு வயது கூட இருக்கலாம். அவரைக்கண்டதும் பிள்ளைகளுக்கெல்லாம் ஓர்வித சந்தோஷமுண்டாயிற்று. மொழிபெயர்க்கும் பாடத்தில் தினம் பத்து சுலோகங்களுக்கு மேல் நடத்த வாத்தியாருக்கு இடங்கொடுக்கக் கூடாதென்னும் ஒரு கட்டுப்பாடு பிள்ளைகளுக்குள் வழங்கிவரும் எட்டிலெழுதாச் சட்டங்களிலொன்றுயிருந்தது. சாவகாசமிருந்தால் பத்து சுலோகங்களுக்குமேல் வேண்டுமானுலும் நடத்தலாம் என்பது உபாத்தியாயர் திருவாய்மலர்ந்தருளிப் பிள்ளைகள் ஒப்புக்கொண்ட சட்டங்களில் ஒன்று. ஆனல் பிள்ளைகளாக இஷ்டப்பட்டு சாவகாசம் கொடுத்தாற்றுனே ? இல்லாவிட்டால் உபாத்தியாயர் என்ன செய்வார் பாவம்! ஒவ்வொருவனும் வந்து அவனவனிடத்தில் உட்காருவதற்கே பத்து நிமிஷமாகும். பிறகு எழுந்து படிக்கச்சொன்னுல் தட்டித்தடவிக்கொண்டு ஒவ்வொரு எழுத்தாகப் படிப்பார்கள். உபாத்தியாயர் புதிதாய் இருந்துவிட்டால் அவரை ஏமாற்றுவது இன்னு மெளிது. பழையவாத்தியார் பாடம் நடத்துவதில் அனுஷ்டித்து வந்த வழக்கங்களைப்பற்றிப் புதுவாத்தியாருக்குப் பிரசங்கம் செய்ய ஆரம்பிப்பார்கள். ஆனல் எவ்வளவு முயன்றும் இன்றைக்கு வந்த புதுவாத்தியாரை ஏமாற்ற சரிப்படவில்லை. அவர் வந்த உடனே வகுப்புப் பிள்

* தன்னையறிந்த தன் தொழிலில் பிரவேசிக்கும் மனேதர்ம சக்தி தடையறியாது.

ளைகள் பெயரைக் கூப்பிட்டு ஒவ்வொருவனை ஆஜர் பார்த்தார். ஆஜரில்லாதவர்களைப் பின்னிட்டு வந்தாலும் வகுப்பில் சேர்க்காமல் வெளியே நிறுத்திவிட்டார். பாடம் நடத்தும் வழக்கத்தைப்பற்றி ஏதாவது பிள்ளைகள் பிரசங்கம் செய்ய ஆரம்பித்தால் "எல்லாம் எனக்குத் தெரியும்; நிறுத்துங்கள்." என்று அடக்கிவிட்டார். தான் கேள்விகேட்கும் மாதிரியினாலேயே, பிள்ளைகள் வாயிலிருந்து சரியான பதிலை வருவித்தார். அவர் கேட்கிற நயத்தில் எப்பேர்ப்பட்டவனுக்கும் எனக்குத் தெரியாதென்று சொல்ல வெட்கமாயிருந்தது. யாராவது தப்பாக பதில் சொன்னால், அதில் இன்ன இடத்தில் தப்பு இருக்கிறதென்று அவனையே கண்டுபிடிக்கச்செய்து அவன் வாயினாலேயே சரியான பதிலையும் வருவித்த பிறகு தான் அவனை விடுவார். இத்தனைக்கும் அவருடைய கேள்விகள் ஒன்றன்மேலொன்றாய் வருகிற வேகத்தில் எவ்விதம் இவருடைய வேகத்தை அடக்கலாம் என்று யோசிக்க பிள்ளைகளுக்கு சாவகாசமில்லை. தான் சுலோகத்தைப் படிக்கிற மாதிரியிலேயே அர்த்தம் தெரியும்படி செய்தார். சுருக்கிச் சொல்லின், எங்களுக்குச் சொல்லிக் கொடுப்பதே அவருக்கு ஒரு ஆநந்தத்தையும் உத்ஸாஹத்தையும் உண்டு பண்ணும் விளையாட்டாக இருந்தது. பிள்ளைகளுக்கும் படிப்பில் அதே மாதிரி உத்ஸாஹத்தை உண்டு பண்ண வேண்டுமென்று கருத்துள்ளவர் போல் பிரயாசைப் பட்டார். ஆகக்கூடி எவ்விதத்திலும் அவர் புதுவாத்தியாராகவே இருந்தார்.

முக்கால் மணியாயிற்று. இன்னும் கால் மணிதான் பாடம். பத்து சுலோகங்களும் முடிந்து விட்டது. இதற்குமேல் விசேஷமாய் யாரும் படித்துக்கொண்டு வரவில்லை. எழுந்து படிக்கச் சொல்லப்பட்ட பிள்ளைகளில் ஒவ்வொருவனும் உளற ஆரம்பித்தான். உடனே மற்றப் பிள்ளைகளெல்லாரையும் விட்டுவிட்டு வகுப்பு முதலில் உட்கார்ந்திருந்த பிள்ளைகளில் யாராவதிருக்கிறானா என்று பார்த்தார். என்னை எழுந்து படிக்கச் சொன்னார். உடனே மற்றப் பிள்ளைகளெல்லாம் தப்பித்தோமென்று பெருமூச்சு விட்டார்கள். இன்னும் உள்ள கால் மணிப்பொழுதில் வாத்தியாருக்கு வேறு யாரையும் கேள்வி கேட்கவேண்டிய அவசியம் வைக்காமல் சரியாக பதில் சொல்லிப் பொழுதைப் போக்கிவிடுவேனென்று அவர்களுக்கு என்னிடத்தில் நம்பிக்கை. என்னைப் படிக்கச் சொன்ன உடனே ராமுடுவும் மணியனும் தாங்கள் உட்கார்ந்திருந்த விசுபலகையில் கோடு கிழித்துப் "பதினைந்தாம் புலி" என்னும் ஆட்டத்தைத் திருட்டுத் தனமாய் ஆட ஆரம்பித்தார்கள். நானும் இரண்டு மூன்று சுலோகம் படித்து சரியாய் இங்கிலீஷ் சொல்லிக்கொண்டு போனேன். வாத்தியாரும் "பேஷ்! அதுசரி!" என்று என்னைத் தட்டிக்கொடுத்துக் கொண்டு வந்தார். கடைசியில்,

"தூரஸ்தம் ரதமாலோக்யலக்ஷ்மணஞ் சமுகுர்முகுஃ
நிரீக்ஷமாணந் தூத்விக்ஞம் ஸீதாம் சோகஸ்ஸமாவிசத்"

என்னும் சுலோகத்தைப் படிக்கையிலே எனக்குக் குரல் தழதழத்தது. மணியன் ஆட்டத்திலிருந்தபடியே என்னைப்பார்த்து "இவன்கூடப் படிக்காமல் வருவானா என்ன?" என்பதுபோல் முணுமுணுத்தான்.

மறுபடியும் நான் கூடிய மட்டும் தன்னைத் தானே அடக்கிக்கொண்டு படித்தேன். இங்கிலீஷ் சொல்ல ஆரம்பித்து இரண்டு வார்த்தை சொல்லிக்கொண்டிருக்கும் பொழுதே, இதற்கு முன்படித்த சுலோகங்களின் அர்த்த மெல்லாம் ஞாபகத்துக்கு வந்து பேசமாட்டாமல் தொண்டையி லடைத்துக்கொண்டது. கண்களில் நீர் ததும்பிற்று. இதைப்பார்த்த உடனே போதும்! நீ உட்காரு" என்று சொல்லிவிட்டு வாத்தியார் அடுத்த பையனை எழுந்திருக்கச் சொன்னார். அடுத்த பையன் வெள்ளைக்காரப் பையன். அவன் தகப்பனுக்கு எஞ்சினீயர் உத்தியோகம். எண்ணூறு ரூபாய் சம்பளம்.

அவருடைய நிர்ப்பந்தத்துக்காக அப் பையன் சம்ஸ்கிருதம் படித்தானே ஒழிய அவனுக்காக அந்த பாஷையில் ஆவலில்லை.

உபாத்தியாயர் எழுந்து படிக்கச் சொன்னவுடனே "எனக்குத் தெரியாதையா! நான் பத்து சுலோகத்துக்கு மேல் படித்து வரவில்லை" என்றான்.

"ஏன்?" என்று உபாத்தியாயர் கேட்டார்.

"பழைய வாத்தியார் தினம் பத்து சுலோகம் தான் பாடம் என்று ஏற்படுத்தி யிருக்கிறார், ஐயா" என்று வெள்ளைக்காரப் பையன் சொன்னான்,

வாத்தியார் "அப்படித்தானா?" என்றார். யாரும் பதில் சொல்லவில்லை.

"சட்டாம்பிள்ளை யார்?" என்றார். எல்லோரும் என்னைக் காண்பித்தார்கள்.

"எப்படி வழக்கம்?" என்று வாத்தியார் என்னைக் கேட்டார்.

"விசேஷமாய் பத்து சுலோகத்துக்கு மேல் ஆகாது" என்றேன்.

"அதாவது?" என்று வாத்தியார் அழுத்திக் கேட்டார்.

"பொழுதிருந்தால் பத்து சுலோகத்துக்கு மேலும் நடத்தலாம் என்று பழைய வாத்தியார் சொல்லி இருக்கிறார். ஆனால் அதற்கு மேல் சாவகாச மிருக்கிற வழக்கமில்லை." என்றேன்.

"வெள்ளைக்காரன்! விசுபலகை மேலேறி நில்!" என்று வாத்தியார் சொன்னார்.

"அந்தக் குள்ளப்பயலை இன்றைக்கு நசுக்கி விடுகிறேன் பார்!" என்று என்னைப் பார்த்து முணுமுணுத்துக் கொண்டே வெள்ளைக்காரன் பலகைமேலேறினான்.

பள்ளிக்கூடம் கலைந்ததும் மணியன் வெளியேவர கொஞ்சம் தாமதித்தது. அதற்குள்ளாக வெள்ளைக்காரன் என் கழுத்தைப் பிடித்து ஒரு உலுக்கு உலுக்கிக் கன்னத்தில் ஒரு அறை அறைந்தான். உடனே பக்கத்தில் இருந்த பையன்களெல்லாம் கைகொட்டிச் சிறித்தார்கள்.

"இவன் சட்டாம்பிள்ளையா யிருந்தால் 10 சுலோகத்துக்கு மேல் எப்படி படித்துக் கொண்டு வரலாம்?" என்றான் ஒருவன்.

"10சுலோகத்துக்கு மேல் தான் படித்தானே, முழுமையும் தானே அர்த்தம் சொல்லக் கூடாதா? பாதியில் அழுமூஞ்சித்தனம் வந்து விட்டது. கண்களின் குழாயைத் திருப்பி விட்டான்." என்றான் இன்னொருவன், இதற்குள்ளாக மணியன் வந்து சேர்ந்தான். என் கழுத்தில் வெள்ளைக்காரன் கையிருப்பதைக் கண்டு "துரை! அவன் கழுத்தை விடுகிறாயா இல்லையா?" என்று மணியன் கேட்டான்.

"விடா விட்டாலோ?" என்றான் துரை.

என் கழுத்தைப் பிடித்திருந்த கையைத் தடியாலடிப்பது போல் மணியன் ஓங்கி ஒரே தட்டாகத் தட்டிவிட்டான். வெள்ளைக்காரன் "குஸ்திக்கு வருகிறாயா?" என்றான். மணியன் "சரி! மாதாகோவிலுக்குப் பின்னால் போவோம் வா" என்றான். பிள்ளைகளுக்குள் எப்பொழுதாவது மனஸ்தாபத்தினால் சண்டையுண்டானால் அதை தீர்த்துக் கொள்ளும் பொருட்டு உபாத்தியாயர் கண்காணாதபடி கோவிலுக்குப் பின்னால் போவது வழக்கம்.

மணியனுக்கும் வெள்ளைக்காரனுக்கும் "குஸ்தி" என்கிற சமாசாரம் பிள்ளைகளுக்கெல்லாம் காட்டுத்தீபோல் பரவிற்று. வீட்டுக்குப் போக வேண்டியவர்களெல்லாம் கோவிலுக்குப்பின்புறத்தில் திருட்டுத்தனமாய் ஒளிந்தார்கள். நான் நேராக நடராஜன் வகுப்புக்குச் சென்று அவனிடத்தில் சமாசாரத்தைச் சொன்னேன்.

நடராஜனும் நானுமாகக் கொஞ்சநேரம்கழித்துக் கோவிலுக்குப் பின்னால் போனோம்

அங்கே குஸ்தி மும்மரமாய் நடந்து கொண்டிருந்தது. பிள்ளைகளெல்லாம் ஐந்து நிமிஷத்துக்கொருதரம் கைதட்டிக்கொண்டிருந்தார்கள். நாங்கள் வந்த பொழுது மணியன் கீழே படுத்துக்கொண்டிருந்தான். வெள்ளைக்காரன் அவனைப் புரட்டி முதுகு கீழே படும்படியாகத் தள்ளப்பார்த்தான். மணியன் அவனுக்கு இடங்கொடுக்காமல் உடம்பை நெருக்கிச் சுருக்கிக்கொண்டு படுத்திருந்தான். வெள்ளைக்காரன் வெகு நேரம் முயன்றுபார்த்தும் முடியவில்லை. மத்தியஸ்தனுய் ஏற்படுத்தியிருந்த பையன் "போதும்! இன்னொரு மூச்சுப் பார்ப்போம், எழுந்திரு." என்றான்.

நடராஜன் இந்த சண்டையை நிறுத்திவிடுவானென்று அவனை அழைத்து வந்தேன். கீழ் வகுப்புப் பிள்ளைகள் அடிதடி சண்டை செய்து கொண்டிருந்தால் உயர்ந்த வகுப்புப் பிள்ளைகள் அதைக் கண்ணால் கண்டாலும் காதினால் கேள்விப்பட்டாலும் நிறுத்தி சமாதானப்படுத்தவாவது பெரிய உபாத்தியாயரிடத்தில் சொல்லவாவது வேண்டும் என்பது பள்ளிக்கூடத்துச் சட்டம். ஆனால் நடராஜன் ஒன்றுஞ்செய்யவில்லை. சும்மா நின்றுகொண்டு வேடிக்கை பார்த்தான். ராமுடு நடராஜன் காதில் ரஹஸியமாய் "பெரிய உபாத்தியாயரிடம் சொல்லாதே, நானும் இன்னொரு பையனும் பந்தயம் வைத்திருக்கிறோம்" என்றான். நடராஜனைக் கண்டதும் சிறுபையன்களெல்லாம் மெதுவாய் நழுவி விட்டார்கள் அவன் சும்மா நிற்பதைப் பார்த்து சற்றுப் பெரிய பையன்கள் மட்டும் நின்று கொண்டிருந்தார்கள்.

வெள்ளைக்காரனுக்குக் காலில் பலம்; மணியனுக்கு முதுகிலும் கையிலும் பலம். வெள்ளைக்காரன் மணியனைக் காட்டிலும் ஒரு பிடி உயரம் அதிகம்; சதை அதிகம், கனமும் அதிகம். மணியனுக்கு நரம்பின் வலிமை அதிகம்; உடம்பு இலேசு, சுறுசுறுப்பும் அதிகம். குள்ளமாயிருந்தாலும் வெள்ளைக்காரன் தோளில் கை வைத்து ஒரே எழும்பலாய் எழும்பித்தாண்டிக் குதித்து விடுவான். ஆதலால் வெள்ளைக்காரன் அவனைக் கட்டிப்பிடிக்க முடியவில்லை. முதல்தடவை காலைத் தட்டிவிட்டு மணியனைக் கீழே தள்ளிவிட்டான். அடுத்த தடவை மணியன் காலைப் பரப்பிக்கொண்டு கட்டை விரலை பூமியில் அழுத்திக் கொண்டு நின்றமையாலும், வெள்ளைக்காரனுடைய பிடிகளுக்கெல்லாம் இடங்கொடுக்காமல் பதிலுக்குத் தன்னுடைய சாமார்த்தியத்தையும் காண்பிக்காமல், வெகுநேரம் சும்மா ஒதுங்கிக் கொடுத்துக் கொண்டும் திரும்பி நின்று கொண்டுமே வந்தமையாலும், வெள்ளைக்காரன் அங்குமிங்கும் அலைக்கப்பட்டு வேர்க்க வியர்க்க வெகு கோபம் கொண்டு மேல் மூச்சுக் கீழ்மூச்சுவாங்க ஓடி வந்து ஒரே மொத்தமாய் மணியன் பேரில் விழுந்து அவனைக் கீழே தள்ளப் பார்த்தான். மணியன் இது தான் சமயமென்று அவன் சமீபத்தில் நெருங்கி வந்த உடனே தான் குள்ளனுகையால் திடீரென்று குனிந்து வெள்ளைக்காரன் தொடையைக்கையால் பற்றி முன்னுக்கிழுத்துக்கொண்டு அவன் மார்புக்கு நேராகத் தலையைக் கொடுத்துத் தன் முதுகின் முழு பலத்தையும் சேர்த்துவைத்து ஒரு முட்டு முட்டினான். அப்படியே வெள்ளைக்காரன் அரிசிச் சாக்குபோல் பொத்தென்று மல்லாக்க விழுந்தான். உடனே "பலேமணி, வந்தே மாதரம்!" என்று பிள்ளைகளெல்லாம் "கோல்" என்று கைதட்டி விட்டார்கள்.

கீழே விழுந்த வேகத்தில் வெள்ளைக்காரன் மணியன் கையைப் பிடித்து உதறி எறிந்து விட்டு எழுந்து போனான். மறுநாள்முதல் கை யெடுத்து சலாம் செய்து வந்தான். இருவரும் அது முதல் ஸ்நேகமாகவே நடந்து வந்தார்கள்.

# DELHI

## THE ANCIENT IMPERIAL CITY.

## டெல்லிமாநகரம்.

பரதகண்டத்தில் பூர்வகாலத்தில் அதிக பிரபலமாகவிருந்த பட்டணங்களில் சிரேஷ்டமானது இந்நகரமே. அஸ்தினபுரத்திலிருந்த பஞ்சபாண்டவர்களை யழைத்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணபகவான் காண்டவப்பிரஸ்தமென்னு மிடத்திற்கு வர அந்த விடம் அச்சமயத்திலிருந்த கம்பீரமான காக்ஷியையும் மற்ற இயற்கை யமைப்புகளையும் கண்ட பகவான் தேவதச்சனாகிய விஸ்வகர்மாவை யழைத்து, இப்பாண்டவர்களுக்காக ஒரு திவ்வியமான நகரத்தையும்—அதில்தகுந்த அரண்மனைகளையும் கட்டும்படி ஆக்யாபிக்க, விஸ்வகர்மாவும் உடனே வனத்தையழித்து, அதிக விசித்திரவினோதங்களோடகூடிய ஒரு சிறந்த அரண்மனையையும், பல கோட்டைகளையும், ஒரு பெரும் பட்டணத்தையும் உண்டு பண்ணிக் கொடுக்கவே, ஸ்ரீ கிருஷ்ணர் அப்பட்டணத்தின் அழகையும் அலங்காரத்தையும் கண்டு, அதற்கு இந்திரப்பிரஸ்தம் என்று பெயரிட்டு தர்மபுத்திரரை அரசராக்கி யாளும்படிச் செய்த பட்டணமிருந்த விடமிதுவே. இதற்குக் கீழ்புறத்தில் சுமார் இருபது மையில் தூரத்தில் குருவம்சத்து அரசர்கள் ஆண்டு வந்த அஸ்தினபுரமும் அதற்கு சமீபத்தில் குருக்ஷேத்திரமென்ற விசாலமான வெளியிடமும் இப்பொழுது மிருக்கின்றது. இது இப்பொழுது அதிக சிறப்புடன் காணப்படாவிட்டாலும், ஆதியில் சுவாயம்பு மனுவால் ஸ்தாபிக்கப்பட்டு பாஞ்சாலத்திற்கு பிரதானப் பட்டணமாக பல நூற்றாண்டுகள் சீரும் சிறப்பும் கொண்டதாய் விளங்கி, மேற்படி மனுவின் சந்ததியில் தோன்றிய பரத மகாராஜன் ஆளுகைக் குட்பட்டு இந்து தேசத்திற்கே சிரேஷ்ட பட்டணமாகி விஸ்தீரணத்தில் பெருகிப் பரதக் கண்டமென்று பெயரிடப்பட்டதாகவும், பிறகு இவருடைய சந்ததிகளில் சிரேஷ்டரான அஸ்திமகாராஜன் காலத்தில் அஸ்தினபுரமென்று பெயரிடப்பட்டு பல நூற்றாண்டுகள் கழிய, இவரது சந்ததிகளில் பாண்டவ குருகுலத்தார் தோன்றி பின்னும் சிறப்படைந்ததாகக் கூறப்படுவதும் இந்த அஸ்தினபுரமே.

2. இந்த இந்திரப்பிரஸ்தம் என்ற நகரமானது பிறகு ஜெயசந்திரன் என்ற ஒரு அரசனால் கொஞ்சகாலம் ஆளப்பட்டதாகவும், அவன் தம்பி டெலுசந்திரன் பட்டணத்தை யடைந்து வெகு காலம் நீதி தவறாமல் அரசாண்டதாகவும், இவன் குடிகளிடத்தில் அதிக அன்பும் ஆர்வமும் கொண்டு இந்திரப் பிரஸ்தமென்ற நகரத்தை உலகிலுள்ள பட்டணங்களில் சிறந்ததாகச் செய்ய எண்ணங்கொண்டு பல சிங்காரமாட மாளிகைகளையும் கோவில்களையும் கட்டி தர்மபரிபாலனஞ் செய்துவந்தபடியால் ஜனங்கள் இப்பட்டணத்தை டெலு பட்டணம், டெல்லி என்று அழைக்கத் தொடங்கினதாகவும் அக்காலத்தில் இந்த பட்டணமிருந்த சிறப்பே அந்நியர்கள் இத்தேசத்தின் பேரில் படை யெடுத்துவரக் காரணமென்றும் சொல்லப்படுகிறது.

3. பிறகு மகமதியர்கள் படைபெடுப்பில் டில்லியானது பல தடவைகளில் கொள்ளை யடிக்கப் பட்டும் கொளுத்தப்பட்டும் அழிந்து பலதடவைகளில் அப்போதைக் கப்போது ஆண்ட அரசர்களால் கட்டப்பட்டு வந்த போதிலும், பூர்வத்திலிருந்த கோட்டை கொத்தளங்களும், அரண்மனைகளும் மாடமாளிகைகளும் இடிந்து பாழாக்கப்பட்ட காலி பூமிகளில் குச்சுக் குடிசைகளாவதுகட்டி பூர்வடில்லியின் விஸ்தீரணத்தில் பட்டணத்தை நாம் இனி எக்காலமும் பார்க்கப்போகிறதில்லை யென்பது திண்ணம். கி. பி. 1398ம் வருஷத்தில் டாமர்லேன் என்ற கொலைபாதகன் டில்லிப் பட்டணத்திற்கு நெருப்பையிட்டுக் கொளுத்தி இலக்ஷம் இந்துக்களைக் கைதிகளாக்கி வேட்டை

யாடிக்கொன்று பிரேதங்களை நாய் நரிகளும் கழுகுகளும் தின்னும்படி விட்டு பட்டணத்தைப் பாழாக்கியதையும், 1554ம் வருஷத்தில் அக்பர் பாதுஷா என்ற மகமதிய அரசனால் நான்கு லக்ஷம் பதாதிகளாலும் இரண்டு லக்ஷம் குதிரை வீரர்களாலும் இந்த டில்லிப் பட்டணமானது காக்கப்பட்டதையும், இவர் காலத்தில் ஜனங்கள் சுகவாழ்க்கை யடைந்ததையும் போன்ற விஷயங்களை எழுதுவ தென்றால் தேச சரித்திரமாக வளர்ந்துவிடுமென்று அஞ்சி சுருக்கிக் கூறுகிறோம். பிறகு இந்த டில்லியானது ஜிஹான்கிர், ஷாஜிஹான், அவுரங்கசீப் முதலானவர்களுடைய ஆளுகைக்குட் பட்டது. இவர்களில் ஷாஜிஹான் காலத்தில், 1631ம் வருஷத்தில் பல பழைய கட்டடங்கள் இடிக்கப்பட்டு புதிய கட்டடங்கள் கட்டப்பட்டன. ரோட்டுகள் சீராக்கப்பட்டன. நகரம் மாட மாளிகைகளாலும் மஜீதுகளாலும் அலங்கரிக்கப்பட்டதுடன் ஒரு புறத்தில் யமுனை நதியே எல்லையாக வமைய மற்ற மூன்று பக்கங்களிலும் பிரமாண்டமான சுவரை வைத்து பத்திரப்படுத்தி, பட்டணத்தை ஏழுமைல் நீளமும் மூன்று மைல் அகலமுமுள்ளதாக்கி யமுனை நதியை யடுத்து ஒருபலமான கோட்டையும் பட்டணத்தைச் சுற்றி பல சிறிய கோட்டைகளையும் கட்டி அவற்றில் தகுந்த விடங்களில் பீரங்கிகளை யமைத்து; ஜல சௌக்கியத்தின் பொருட்டு யமுனை நதியிலிருந்து 70 மையில் தூரம் நீர் பாய்வதற்கு வெட்டியிருந்த கால்வாயிலிருந்து 25 அடி அகலமும், அதே அடி ஆழமும் கொண்ட கால்வாயொன்று டில்லிப் பட்டணத்திற்குள் பிரவேசிக்கும்படி வெட்டி, ஜனங்களுக்கு ஒவ்வொரு விஷயத்திலும் நன்மையைச் செய்தபடியால் இதற்கு ஷாஜிஹான் பட்டணமென்றே பெயர் வழங்கலாயிற்று. இந்த அரசனுக்குப் பிறகு அவுரங்கசீப்பைத்தவிர ஒருவராவது அதிக காலம் அரசுபுரியவில்லை. பிறகு 1737ம் வருஷத்தில் பாஜீராவ் என்னும் மஹராஷ்டிரன் டில்லியைத் தாக்கி மகமதியர்களுடைய பலத்தைக் கண்டிக்க, பார்சிகத்திலிருந்து நாதர்ஷா என்பவன் படையெடுத்துவந்து டில்லிக் கோட்டையைப் பிடித்து குடிகளுடைய சொத்துக்களையும், பிராணனையும் கொள்ளை கொண்டதன்றி கிடைத்த வரையில் வாரிக்கொண்டு, வந்தவழியே போனான். இப்படி பல அவதிகளை யடைந்த டில்லிமா நகரமானது கடைசியாக அங்கிலேயர் வசமாகி பம்பாய், கல்கத்தா, சென்னை போல் மிகுந்த சிறப்பை யடையாதபோதிலும், பூர்வப் பிரக்யாதியை உன்னி சிறப்புள்ள விடமாகவே கருதப்படுகிறது.

4. இப்பொழுது இந்த டில்லிப் பட்டணமானது வடமேற்கு மாகாணங்களில் டில்லி என்ற ஜில்லாவிற்குத் தலைமைப் பட்டணம். இது யமுனாநதி யோரத்தில் பஞ்சாப் மாகாணத்தின் தென் கிழக்குக் கோடியில் அரவலி என்ற மலையின் அடிவாரத்தில் சமுத்திர மட்டத்திற்கு சுமார் 700 அடி உயரத்தில் அமைந்திருக்கிறது. இது ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு விதமாய் பாழாக்கப் பட்டும் நூதனமாய்கட்டப்பட்டும் வந்தபடியால் இப்பொழுது பட்டணமிருக்கிறபாகத்தையும், பாழாயழிந்து குட்டப்மைநானர் என்ற கோபுரம் வரை அதாவது பதனொரு மைபில் தூரமும் நான்கு மைல் அகலமும் கொண்டபாகத்தையும் சேர்த்து விஸ்தீரணத்தை கவனிக்கும் பொழுது இப்பட்டணம் ஒரு காலத்தில் 45 சதுரமையில் விஸ்தீரண முள்ளதாயிருந்திருக்க வேண்டுமென்று தோற்றுகிறது. தவிர இவ்விஸ்தீரணத்தில் எவ்வளவுகோட்டைகளும், அரண்மனைகளும், மாட மாளிகைகளும், கூட கோபுரங்களும், கோயில்களும் இருக்கவேண்டுமோ என்பதை ஒருவாறு நிச்சயிக்க எண்ணங்கொண்டு இப்பட்டணத்திலிருந்து குட்டப்மைனருக்கு செல்லுகிற பாதையின் இருபுறத்தையும் கவனித்து அங்கங்கே தோற்றுகிற மதிள் சுவர்களையும், கோவில் பிரகாரங்களையும், கோபுரங்களையும், கோட்டை சுவர்களை

யும் அவைகளுக் கிடையில் காணப்படும் குளம், கிணறு முதலான வைகளையும் கணக்கிடும் பொழுது பத்தாயிரக் கணக்கிற்கு அதிகப் படுவதை நோக்கி தேங்கி நிற்க நேருமேயன்றி முழுவதையும் எண்ணிக் கணக்கிட முடியா. இப்பொழுது இப்படி பாழடைந்த பாகங்களில் பல மகமதியர்கள் தோட்டங்கள் செய்தும், சிறிய வீடுகளும், குடிசைகளும் கட்டிக்கொண்டும் வசிக்கிறார்கள். இவர்களில் பலரை நேரில் கண்டு விசாரித்ததில் அப்பூமிகள் தங்கள் பட்ட பூமிகள் என்றும், பூர்வத்தில் இன்ன இராஜாக்கள் வசித்த விடமென்றும், இன்ன தேவதையிருந்த கோவிலென்றும் சொல்லுகிறார்கள். இவர்கள் ஒவ்வொரு வரும் பூர்வமாயிருந்த கட்டடங்களை யிடிப்பதும், பூமிகளை எட்டுப் பத்தடிவரையில் தோண்டிப் பார்ப்பதுமான வேலையிலேயே இருக்கிறார்கள். அப்படி ஆராய்ச்சி செய்தவர்களில் சிலருக்கு பெருந்திரவியக்குவியல்களும், விலை பெற்ற ஆபரணங்களும் கிடைத்ததாகவும், பலருக்கு இடமகிமையினாலேயே நல்ல ஜீவனமும் சுகவாழ்வு முண்டானதாகவும் கூறுகின்றார்கள். ஆறுவது மைலில் பாதைக்கு கீழ்புறத்தில் கால் மைல் தூரத்தில் காணப்படுகிற ஒரு கோட்டை போன்ற மதிள்சுவருடன் கூடிய ஒரு தோட்டம், நாம் நேரில் பார்த்தவைகளின் திறமானது. இதற்குள்ளிருந்த ஒவ்வொரு கட்டடத்தையும் தரை மட்டமாக்கி இரண்டுசிறியவீடுகளைக் கட்டிக்கொண்டு சகோதரர்களாகிய இரு மகமதியர்கள் தங்கள்குடும்பத்துடன் வசிக்கிறார்கள். இது சுமார் 5 அல்லது 6ஏகரா விஸ்தீரணமுள்ள பூமி. சிறியதும் பெரியதுமாய் 5 கிணறுகளிருக்கின்றன. மூன்று சிறிய கிணறுகளில் ஜலம் பத்தடி ஆழத்தில் காணப்படுகிறது. இதில் கொய்யா மரங்கள் வைத்து ஏராளமாய் பயிர் செய்திருந்ததுடன் வெள்ளரி, புடலை, அவரை, மிளகாய், கத்தரி முதலிய செடிகளும் வைத்து பயிரிட்டிருந்தார்கள். துவரை வெகு நேர்த்தியாக விளைந்திருந்தது. இவர்களுடைய தகப்பன் இப்பூமியை 180 ரூபாய்க்கு விலைக்கு வாங்கி சொற்பகாலத்திற்குள் பெருத்த பணக்காரனாய் விளங்கினதாகவும் அக்கிரம வழியிலிறங்கி ஆராதாரிச் செலவு செய்து பழைய ஸ்திதிக்கு வந்து இறந்து போனபோதிலும் பிள்ளைகள் மரியாதையாக ஜீவனம் செய்து வருவதாகவும், இவர்களில் மூத்தவன் குமாரன் எப்-எ பரீக்ஷையில் தேறி 50 ரூபாய் சம்பளத்திலிருப்பதாகவும் தெரிந்தது. இப்படியே பலர். இந்ததோட்டத்திற்குள்சிலாரூபமான அம்மன்விக்கிரகமொன்று, சமதிருஷ்டி இலக்ஷணங்களுடன் ஒரு மரத்தடியில் வைக்கப்பட்டிருக்கின்றது. இவர்கள் மகம்மதியர்களாயிருந்தும் இந்த விக்கிரகத்தை வெகு பக்தியுடன் போற்றிப் பணிந்து வருகிறதாகவும் தெரியவந்தது.

5. தற்காலத்திய பட்டணமானது சுமார் ஏழுமைமயில் சுற்றளவுள்ளதாய் யமுனா நதியோரத்தில் அதிக கம்பீரமான காட்சியையுடையதாய் சுமார் 25 அடி உயரமும், 16 அடி அகலமுமுள்ள மதிள் சுவற்றினால் வளைக்கப்பட்டதாய் காஸ்மீரம், காபூல், லாஹூர் ஆஜ்மீர், தர்கோமான், மோரி, டெல்லி, நெகம்பாத், லால், கைலா, பார்ஸ்கானா என்ற பதின்னொரு கோட்டைவாயில்கள் போன்றியவாசல்களையுடைய ஒரு பெரும் கோட்டை போன்றதாய் அநேக மாட மாளிகைகளும், கூட கோபுரங்களும், மஜீதுகளும் விளங்கப் பெற்றதாய், கீழ்புறத்தில் பலமான ஒரு கோட்டையையுமுடையதாய் விளங்குகிறது. மோகலாயர் அதிகாரம் சிறந்திருந்த பொழுது அந்த ராஜாக்கள் தங்களுக்கு பிரியமான ஜாதியார்களை வரவழைத்து அவர்கள் தங்களுக்குதவியாக விருக்கும்படி பட்டணத்திற்கு வெளியில் தனித்தனியான பேட்டைகளைக்கட்டிக் கொடுத்து அந்தந்தப் பேட்டைகளில் வசிக்கும் ஜாதியார்களின் பெயர் வழங்கும்படியாக வாசல்களுக்குப் பெயரிடப் பட்டதாகத் தெரியவருகிறது. இப்பொழுது இந்த வாசல்களும் மதிள் சுவர்களும் பல விடங்களில் இடிந்து அழிந்துக்கொண்டு வருகின்றன. லாஹூர் கேட்டின்

ருந்து சண்டிசவுக் வழியாகக் கோட்டைக்குச் செல்லும் "வெள்ளித் தெருவு" என்ற தெருவு வெகு விநோதமானது. இது சுமார் 60 கஜம் அகல முள்ளதாயும் இரண்டாகப் பிரிக்கப்பட்டு நடுவில் இரண்டடி மேடுள்ள பாதையாகவும் அவைகளின் நடுவே நிழலைக் கொடுக்கக் கூடிய மரங்களை வைத்து வளர்த்தியும், இடைக்கிடை கோபுரத்தோடு கூடிய இளைப்பாறுதலுக்கேற்ற மண்டபங்களும், தண்ணீர்க்குழாய்களும் அமைத்திருப்பதுடன், அம்மேடையின் மேல் மத்தியபாகத்தில் சாயந்திர வேளைகளில் பலவித சாமான்களை அடுக்கடுக்காய் வைத்துக்கொண்டு வர்த்தகர்கள் வியாபாரஞ் செய்யத் தகுந்த விதமாய் செய்திருப்பதன்றி, இரு தெருவாக விருக்கிற பாதைகளில் குதிரை வண்டிகள் செல்லவும் மாட்டு வண்டிகள் போகவும் தகுந்தபடி பிரித்து வைக்கப்பட்டு, இருபுறத்திலும் ஐந்து அடுக்கு ஆறடுக்குகளுள்ள மெத்தைவீடுகள் பிரகாசிக்க அவைகளின் அடித்தட்டில், வெள்ளி பொன் நகை வியாபாரிகளும், பட்டு பீதாம்பரதினுசுகள் விற்கிற சேட்மார்களும், தந்தத்தினுலும் சிரேஷ்டமான மரத்தினுலும் செய்த பெட்டி முதலிய பல விநோதப்பொருள்களை விற்கிற மார்வாடிகளும் இப்படியே பல வியாபாரிகளும் விதம்விதமான எழுத்துகளோடு கூடிய போர்டுகளைப் போட்டுக் கொண்டு, மேஜை நாற்காலிகளின் பேரில் உட்கார்ந்துக் கொண்டும், திண்டுதலையணிகளில் சாய்ந்துக் கொண்டும், தங்கள் வியாபாரத்தில் கவனத்தைச் செலுத்தினவர்களாய் விளங்க, மேல்மாடிகளில் பல தேசத்திலிருந்து வந்திருப்பவர்களாகிய தாசிகள் வெகு நேர்த்தியாக உடுத்திக் கொண்டு முன்னணியில் உலாவியும், பிடில், வீணை முதலிய வாத்தியக்கருவிகளை வைத்துக்கொண்டு ஆடிப்பாடிக்கொண்டிருப்பதையும் பார்க்க இதைவிட விநோதமான தெருவு இப்பரதக்கண்டத்திலேயே யிராதென்று எண்ணும்படி யிருக்கிறது. இந்தத் தெருவில் தான் 1903ம் வருஷம் ஜனவரி முதல் தேதியில் டில்லி தர்பாரை யொட்டிய ஊர் கோலம், லார்டு கர்ஸனும் அவர் மனைவியும் ஒரு யானையின் பேரில் முன்னே செல்ல, நமது சக்கரவர்த்தியின் தம்பி கானுட் கோமகனும் அவர்தம்மனைவியும் ஒரு யானையின் பேரில் அவர் பக்கத்தில் செல்ல, இவர்களுக்குப் பின்னால், ஐதிராபாத், மைசூர், திருவாங்கூர், பரோடா, ஜெயப்பூர், டோல்ப்பூர், பேட்டியாலா, குவாலியர், ஹோல்கார் முதலிய அரசர்கள் தங்கள் பரிவாரங்களுடன் யானைகளின் பேரில் பின் தொடர, மற்றகவர்னர் முதலியவர்கள் இவர்கள் பின்னே செல்ல பாண்டு முதலிய வாத்திய கோஷத்துடன், இந்தத்தெருவில் தான் சென்றதென்றால், இதற்கு வேறு என்ன சிறப்பு வேண்டும்? இந்தத்தெருவின் மத்தியில் தான் சண்டிசவுக் என்ற கடையும் கோபுரமும் காணப்படுகிறது. இந்தக் கடைகளில் துவரை, கடலை, பயறு முதலிய தானியங்களையும், காய் கனி கிழங்குகளையும் மலைமலையாகக் குவித்துக் கொண்டு விற்கிறார்கள். பலவித சாயமிட்ட துணிகள், கத்தி, கத்தரிக்கோல், கைத்தடி முதலிய பல தட்டு முட்டு சாமான்கள் ஏராளமாய் விற்கப்படுகின்றன. அந்த சவுக்குக்கு சமீபத்தில் இராஜ அரண்மனை என்பதாகபிரம்மாண்டமான பூர்வகாலத்திய கட்டடம் ஒன்று காணப்படுகிறது. இதன் மத்தியிலுள்ள கட்டடத்திற்கு அநேக கலசங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. இந்த பலமான கோட்டைக்கு 40 அடி உயரமுள்ள மதிள் சுவரும் அகழுமுண்டு. ஒரு புறத்தில் யமுனையாற்றின் ஒரு பிரிவு எல்லையாக வமைந்திருக்கிறது, தவிர இக்கோட்டைக்குள் தீவான்காஸ் என்பதாக மந்திராலோசனை மண்டப மொன்று வெள்ளை கற்றூண்கள் வைத்து குரான் வாக்கியங்களோடு பூங்கொடி சித்தராலங்காரமான பல விநோத வேலைகள் செய்து கட்டப்பட்டிருக்கிறது. அரண்மனை என்ற கட்டடமும் இருபுறத்திலும் கோபுரங்களும் அவற்றின் பேரில் பொன்மயமாய் பிரகாசிக்கின்ற கலசங்களோடு, கமான் வளைவுகளும், ஸ்தம்பங்களின் சித்திரவேலை

களும் சுவர்களுக்கு பொன் வெள்ளி முலா மிட்டுச் செய்த பல விநோத சித்திராலங்காரங் களும் பார்க்கப் பார்க்க ஆநந்தத்தை யுண்டா க்கத்தக்கதே. இதைத் தக்கபடி உபயோகப் படுத்தாமல் வைத்திருப்பதின் காரணம் தெரிய வில்லை. இந்த அரண்மனையையடுத்து ஒரு சிங் காரத்தோட்டமும் ஒரு மைதானமும் நல்ல சீரில் வைக்கப்பட்டிருக்கிறது. இத் தோட் டத்திலுள்ள ஸ்படிகப் படிக்கட்டுகளோடு கூடிய தடாகங்கள் அதிக மனோகரமானவை கள். இதற்கு சமீபத்தில் முத்து மஸ்ஜீத் என்ற கட்டடமும் வெள்ளை ஸ்படிகக்கற்க ளாலேயே கட்டப்பட்டது. இதை யடுத்து தீவானீயம் என்ற சபாமண்டபம் காணப்படு கிறது. இதுவும் வெள்ளைக் கற்களாலேயே கட்டப்பட்ட அழகிய மண்டபம். இதில் தான் மயில் சிங்காசனம் என்கிற 60 கோடி ரூபாய் விலை மதிப்புள்ள ஆசனமிருந்ததாகக் கூறப்படுகிறது.

இக்கோட்டையைப் பார்த்துக் கொண்டு வெளிப்படாமல் ஜிம்மா மஸ்ஜீத் என்ற பெரிய கட்டடத்தைப் பார்க்கலாம். இது சுமார் 25 அடி உயரமான மேட்டின் பேரில் செந்நிற மான கற்களால் கட்டப்பட்ட கம்பீரமான கட்டடம். முதலில் சில படிக்கட்டுகளை ஏறிச் சென்றால் முன்புறத்தில் ஒரு தடாகமும் அதின் எதிர்ப்புறத்தில் சுமார் 250அடி நீளமும் 60-அடி அகலமுமுள்ள மண்டபம் காணப் படுகிறது. கருங்கற்றூண்கள் வைக்கப் பட்ட மண்டபமாக விருந்தாலும் அவைகளுக்கு தகு ந்த விதமாக சாயங்கள் கொடுத்து பல சித்திர ங்கள் செய்து, தரையை ஸ்படிகக் கற்களால் பாவி ஒவ்வொருவர் உட்கார்ந்து ஜபம் செய் யப் போதுமான இடங்களாகப் பிரித்துவர்ண மிட்டு மேல்புறத்தில் அரபி எழுத்துக்களில் பல குரான்வாக்கியங்களை சித்திரங்களுடன் கலந்து வரைந்திருக்கிறார்கள். இந்த மஸ்ஜீத் தின் மேல்புறத்திற்குச் செல்லுகிற படிக்கட்டு வழியாக ஏறிச்சென்றால் இருபுறத்திலுமுள்ள கோபுரங்களையும், ஸ்தூபிகளையும், கலசங்களை யும் கட்டடத்தின் அழகையும் பார்க்கக்கூடிய தாயிருப்பதுடன் டில்லி பட்டணத்தின் கம்பீர மான காக்ஷியையும் காணலாம். இந்த கோரி யை ஷாஜிஹான் பத்து லக்ஷம் ரூபாய் செல வில் கட்டியதாகவும், கட்டடம் கட்டி முடிய ஆறு வருஷங்கள் சென்றதாகவும் கூறப்படு கிறது. டில்லியிலுள்ள கட்டடங்களில் இதுவே சிரேஷ்டமானது.

(இன்னும் வரும்.)

T. C. வேங்கடராமணையர்.

---

## SANKARA-PRYAN

## சங்கரப் பிரியன்

### IX ஆளனுப்புதல்

மந்திரி ஞானசீலன்:—யாரடா அது அங்கே!

இருளன்:—சாமி சாமி சாமி நான்தாஞ்சாமி இருளன்.

மந்திரி:—அடே இருளா! நீ சீக்கிரம் போய் கார்பார் கனகசபையிடம் மஹாராஜா தமது குமாரர்களை ஏகாந்தமாய்ப் பார்க்க விருப்பம் கொண்டிருப்பதாகத் தெரிவித்துவிட்டுவா.

இருளன்:—இதோப் பூட்டேன் சாமி! இதோ சொல்லி ஊட்டு வந்தூட்டேன் சாமி! என்று சொல்லிப் போகிறான்.

மந்திரி:-(தனக்குள்) "இன்றையதினம் என்ன நேரிடுமோ தெரியவில்லை. நான் சில காலமாய் சந்தேகித்து வந்தபடியே முடிந்தது. நேற்றைய வேவுகாரரால், அரசகுமாரன் சங்கரப்பிரியன் தாசி தனபாக்கியத்தின் வீட்டில் வெகுநேரம் இருந்து வந்ததாகத் தெரிந்தது. தாசி தன பாக்கியமோ அதி ரூபலாவண்ணமுள்ளவள். வெகு தந்திரசாலி. அரசகுமாரனும் அவள் மோகவலையில் சிக்கியிருக்கிறான். தகப்பனது உத்திரவை முற்றிலும் நிராகரிப்பன் என்பதில் சந்தேகமேயில்லை. நானும் இதுவரையில் இந்த சமாசாரத்தை அரசனிடம் தெரிவித்து என்

அவரது மனதைப் புண்படுத்தவேண்டுமென்று இருந்தேன். இப்பவும் இந்த சமாசாரம் என் மனதிலேயே இருத்தல் வேண்டும். நடந்தபடி நடக்கிறது. நாம் என்ன செய்யலாம்! அரச குமாரர்கள் இவ்வளவு நேரம் அந்தப்புரம் வந்திருக்கலாம். நானும் அவிடம்போகிறேன்." (போகிறான்.)

X கல்யாணம் வேண்டாம்

அந்தப்புறத்தில் அரசனும் ராணியும் ஒருசிங்காதனத்தில் வீற்றிருக்க, அரசகுமாரர்களிருவரும் ஒரு சோபாவின் மேல் உட்கார்ந்திருக்கிறார்கள். மந்திரி ஞானசிலனும் ஒரு ஆசனத்தில் வீற்றிருக்கிறார். பிறகு பின்வரும் சம்பாஷணை நடந்தது.

அரசன்.—அப்பா கண்மணியே சங்கரப்பிரியா! நான் இன்றையதினம் உன்னைக்கூப்பிட்டு விட்ட காரணம் என்ன தெரியுமோ?

சங்கரப் பிரியன்:—தெரியாமலென்ன! நான் கொஞ்சம் சிரமமெடுத்துக் கொண்டு ராஜநீதி முதலான வைகளைக் கற்றுக் கொள்ள வேண்டுமென்று சொல்வதற்காகத்தான்.

அரசன்:—இல்லை அப்பா! அப்படி ஒன்றுமில்லை. இப்பொழுது எனக்கோ வயதாய் விட்டது. இவ்விராச்சியபாரத்தை வகிக்க இனி சக்தி உள்ளவனல்லேன். நீ எனது சிமந்த புத்திரனாகையால், உனக்குத் தான் இவ்விராச்சியம் சேர்ந்தது. இவ்விராச்சிய சம்பிரதாயப்படி, நீ கல்யாணம்செய்து கொண்டாலொழிய சிங்காதனமேறமுடியாது. அதற்காக மதுரை மன்னர் சேதுபதியின் குமாரத்தியை உனக்கு அடுத்த மாதத்தில் கலியாணம் முடிக்க ஏற்பாடு செய்திருக்கிறேன். உன் அபிப்பிராயத்தை அறிவதற்காகத்தானப்பா உன்னைக் கூப்பிட்டு விட்டது.

சங்கரப்பிரியன்:—"தாங்கள் என் விஷயத்தில் இவ்வளவு கவலை எடுத்துக் கொண்டது எனக்கு மிகவும் சந்தோஷம். ஆனல் இப்பொழுது கலியாணம்செய்து கொள்ளவேண்டுமென்னும் அபிப்பிராயம் கிஞ்சித்தேனுமில்லை. தவிர ராச்சியம் வேணுமே, கலியாணம் செய்துகொள்ளாமல் அது எப்படிமுடியும் என்றாலோ, எனக்கு கலியாணம் செய்து கொள்ளுவதில் எவ்வளவு இச்சையிருக்கிறதோ அவ்வளவு இச்சைதான் பட்டம் கட்டிக்கொள்வதற்கு மிருக்கிறது. ஆகையால் தாங்கள் தயவு செய்து இவ்விராச்சியத்தை யாருக்குவேண்டுமோ அவர்களுக்குக் கொடுத்துவிடுங்கள். எனக்கு இப்பொழுது இருக்கும் பங்களாவும் வரும்படியும் போதும்." என்று சொல்லிவிட்டு வெளியே போகிறான்.

அரசன்:—மந்திரி ஞானசிலா, பார்த்தையோ இவ்வளவு நாள் நான்பட்டசிரமத்திற்குப் பிரதிபலனை! நான் முந்தியஜன்மத்தில் என்ன பாபத்தைப் பண்ணினேனே! இப்பேர்ப்பட்ட துஷ்டகுமாரனை அடைந்தேன். அவன் ஒரு நாளும் என் சொல்லைக் கேட்பதில்லை. "பெற்ற மனம் பித்து பிள்ளைமனம் கல்லு" என்பது மெய்யே. அவன் எவ்வளவு அடங்காப்பிடாரியா யிருந்தாலும் எனக்கு அவனிடம் உள்ள வாஞ்சை மாத்திரம் அறவில்லை." என்று சொல்லி முத்து முத்தாய்க் கண்ணீர் உதிர்க்கிறார்.

மந்திரி:-"மஹாராஜா! தாங்கள் கவலைப்படாதீர்கள். பிறந்த அன்றைக்கே ஜோசியர் சோம சுந்தரசாஸ்திரிகள் சொல்லவில்லையோ! அவர் சொன்னபடி இதுவரைக்கும் நடந்துவிட்டது. இனிமேலும் அவர் சொல்லியபடியே நடக்கும் என்பதற்கு ஐயமில்லை. முடிவில், ஒரு ராச்சியத்தைமுடிகொள்வான் என்பது திண்ணம். ஆகையால் தாங்கள் தங்கள் கனிஷ்ட புத்திரனுக்கு விவாகம் நடப்பித்து இவ்விராஜ்ஜியத்தைப் பட்டம் கட்டிவிடுங்கள். நவக்கிரகங்களை ஜெயிக்க யாரால் முடியும். நளன் என்னபாடு படவில்லை! ஸ்ரீராமர் என்ன பாடு படவில்லை! பாண்டவர்கள் என்ன பாடு படவில்லை! ஆகையால் தங்களுக்கு மனக்கவலை வேண்டாம்."

அரசன்:—"சரி அப்படியே செய்து விடுவோம். மதுரை மன்னர் குமாரத்தியை நமது கனிஷ்ட புதல்வன் புத்திரபாக்கியனுக்கே தீர்மானம்செய்து விடு. கலியாணமுகூர்த்தம் இந்த மாதத்திலேயே நிச்சயித்துவிட வேண்டும். பட்டாபிஷேகத்திற்கும் சீக்கிரத்தில் ஒருநாள் பார்க்கவேண்டும் எல்லாவற்றிற்கும் சீக்கிரம் வேண்டிய ஏற்பாடு செய்."

மந்திரி.—அப்படியே மஹாராஜா.

எம். என். கணேசய்யர்.

## LADIES' COLUMN.
## மாதர் பக்கம்

(இத்தலைப்பின்கீழ் மாதர்கள் எழுதும் விஷயங்களும், மாதர்கள் க்ஷேமாபிவிர்த்தியை நாடிய விஷயங்களும் பிரசுரிக்கப்படும்)

FOOLISHNESS BETRAYS ITSELF AND THOSE WHO CHERISH IT.

மூடம் தலைக்கேறினால் முழுதும் விகாரமே.

"பிராசீனஸ்திரீகள்" என்னும் தலைப்பெயரிட்டு ஓர் ஹிந்துமாது நமக்குப் பின்வருமாறு எழுதுகிறார்:—

"சில நூற்றாண்டுகளாக இந்தியாவில் பெண் கல்வி யென்னும் பதமே மறைந்து போயிற்று. ஆதிகாலத்து ரிஷிபத்நிகளும் ராஜகுமாரிகளும் வித்தையில் மகா பாண்டித்யம் பெற்றிருந்தனர். நவீன காலமாகிய தற்போது ஸ்தீரீகள் கொஞ்சம் கல்வியைக் கற்றுவருகிறார்கள். நமது தென்னாட்டு ஸ்திரீகளோ உலக வழக்கத்தைச் சிறிதேனும் அறிந்தவர்களல்லர். படித்த பெண்பிள்ளையை சத்துருவைப் போல் விரோதிக்கிறார்கள். இல்லாத தோஷாரோபணங்களைச் சொல்லி கண், வாய், கைகளால் தங்கள் கோபத்தை வெளியிடுகின்றனர். இதென்ன அறிவீனம்! படித்தால் பெரியவர்களை மதிக்காமலிருந்துவிடுவார்களென்ற பயம் அவர்களுக்குண்டு. புருஷர்களோடுபேசினால் பிரமாதமாக தோஷம் கற்பிக்கிறார்கள். இவர்களிடமுள்ள குற்றங்களை ஏன் அறிந்துகொள்ள வில்லையோ தெரியவில்லை! (காரணம்: "மூடம்"-வி.சி. ப-ர்) அவர்கள் செய்கை படித்தபெண்களுக்கு அருவெறுப்பைத் தருகிறது. வைதீகன் மந்திரம் சொல்லுகிறானென்றசாக்கைவைத்து அவனோடு தனிமையில் கோவில் குளங்களுக்குச்செல்லுகிறதில்லையா? கல்யாண காலங்களில் பேதம்பாராட்டாமல் ஸம்பந்தமில்லாத ஸ்தீரீபுருஷர்கள் ஒருவரையொருவர் விளையாட்டால் நேசம்கொள்ளவில்லையா? தங்களுக்குண்டான ஸுக துக்கங்களை மாமன்மைத்துனனென்ற முறைவைத்துச் சொல்வதை நாம்நித்தியமும்பார்க்கிறோம்.

"மூடர்களுக்கு ஒருவித பயம் பிடித்தால் அதை நீக்க ஸாமன்யர்களால் முடியாது. அவர்களோடு ஸகவாஸம் செய்வது கஷ்டம். பாம்பென்று தாண்டவும் முடியாது; பழுதையென்று மிதிக்கவும் கூடாது. நேற்றையதினம் நம்மை கௌரவமாய் நடத்தினார்களே, இன்றைக்கும் அவ்வித மரியாதை கிடைக்குமென்று நம்புவது மனப்பால் குடிப்பது போலாகும். நவாப் துரைத்தனம் செய்தகாலத்தில் நிமிஷத்துக்கு நிமிஷம் உத்தரவு பிரதியுத்தரவு கிடைக்கும். அது போல் மந்த மதிகள் முதல்நாள் சிரித்ததை மறந்து மறுதினம் முகத்தைக் கடுகடுப்புடன் வைத்துக் கொள்வது வழக்கம். இவர்களைத்திருத்த வழி யுண்டா? யாரால் முடியும்? பிரம்மதேவனே நேரில் வந்து நியாயம் சொன்னாலும் கேளார். அவர்கள் பிடித்த பிடிவாதத்தை விடும்படி செய்ய, அன்யர்களால் இயலாது. அவர்கள் மனதால் செய்யும் காரியங்கள் ஸரி தப்பென்று தங்களுக்குத் தெரியும் வரையில் மூர்க்க எண்ணத்தை விட்டொழியார். இது அவர்களின் ஸ்வபாவமாயிற்று. பாம்புக்குக்கடிக்கும் குணமும் நாய்க்கு குரைக்கும் தன்மையும், துர்ஜனர்களுக்கு துர்க்குணங்கள் அமையவும் இயல்பாய் விட்டன. அவர்களைக் குற்றம் சொல்ல இடமில்லை. அறிவைக் கற்பிக்காத தாய் தந்தைகளைக் குற்றவாளிகளாக்க வேண்டும்."

["மூடம்" என்பது கீழ்த்தேசத்துக்கே யுரியது என்று சொல்லக்கூடாது. பிராசீன ஸ்திரீகளிடத்திலுள்ள துர்க்குணம் பச்சிம ஸ்திரீகளிடத்தும் அதே மாதிரியாய் இல்லாவிட்டால் இன்னொரு விதமாக விருக்கிறது. மூடமுள்ளவிடத்தில் முன் பின் யோசனை யில்லாத குற்றத்தால் மூர்க்கமும் தானே யிருக்கிறது. "பாம்பென்று தாண்டவும் முடியாது; பழுதையென்று மிதிக்கவும் கூடாது" என்று சொல்லிய அளவில், இவ்விஷய மெழுதியவரின் தர்மசங்கடத்தைக் கண்டு நாம் முற்றும் அனுதாபப்படுகிறோம். ஆனால் "தர்மசங்கடம்" உண்டாகாவிட்டால் ஆத்மபுத்தி விர்த்தியின்றி க்ஷீணித்துப் போக நேரிடும். "தர்மசங்கடம்" நேரும்போதெல்லாம் அதற்குப் பின்வாங்காமல், அதிலிருந்து, பிசகு வாராமல் அதற்குத் தப்பிக்கொள்ளும் வழியறியும் விவேகி யாரோ அவன் அல்லது அவளே தீரபுத்தியுடைய வராவர். எப்பேர்ப்பட்ட சங்கடத்திலும் தைரியத்தைக் கைவிடக் கூடாது. புத்திநிதானமும் பிசகக் கூடாது. எல்லா சங்கடங்களிலும் 'தர்மசங்கடம்' தைரியத்தைக் குலைத்துவிடுந்தன்மையது. அர்ச்சுன விஷாத யோகத்தின் உண்மை யென்ன வென்றால், தர்மசங்கடத்தில் அகப்பட்டுத் தவிக்கும் ஆத்மாவின் துக்கத்துக் கிரங்கி பகவான் அவரவர்கள் எண்ணத்துக்குத் தக்கபடி குரு மூர்த்தமாக வந்துதவுகிறார் என்பதே. இதை புத்திசாலியான பெண்மணி சிந்திப்பாளென்று அவளுக்குச் சொல்லாமற்சொல்லத் துணிந்தோம். வி-சி-ப-ர்.]

# CURRENT NOTES AND TOPICS
# விசேஷக் குறிப்புகளும் விஷயங்களும்

**பழவர்க்கங்களில் மின்சந்து.** பழவர்க்கங்களில் பிராணசக்தி யிருக்கிற தென்று ஏ. இ. பெய்ன்ஸ் என்னும் மின்சார சாஸ்திர விற்பன்னர் பிரத்தியக்ஷப் பிரமாணமாய்க் கண்டுபிடித்திருக்கிறார். அவர் "கெல்வின் அஸ்டாடிக் கால்வனோமீடர்" (Kelvin Astatic Galvanometer) என்னும் அதி சூக்ஷ்மமான ஒரு யந்திரத்தினால் மின்சாரசக்தி யெவ்வளவு சொற்பமாயிருந்தாலும் அதை யுணர்ந்தறிய ஒரு வழி கண்டுபிடித்திருக்கிறார். நம்மவர்களில் அநேகரும் 'எலெக்டரிஸிடி' யென்றால் என்னவென்று தெரிந்தும் தெரியாமலிருக்கலாம். வானத்தில் மின்னும் மின்னலின் சாரம், எதுவோ அதுவே 'எலெக்ட்ரிஸிடி' யென்று சொல்கிறது. ஆகையால் தான் அதற்கு 'மின்சாரம்' என்னும் பெயர் வந்தது. மின்சாரத்தையறியு முன், மின்னல் எப்படியுண்டாகிறது என்று சற்று விசாரித்தறிவோம். மின்னல் என்பது இருவித சக்திகள் கூடுவதினாலுண்டாகும் பயன். இந்த இருவித சக்திகளும் உண்மையில் பார்க்கப் போனால் பிரத்தியேகமான இரண்டு சக்திகளல்ல. ஆனால் அடி நுனி யென்பதைப்போலும், 'பலா' 'அபலா' என்பதைப்போலும் 'ஆண்' 'பெண்' என்பதைப் போலும் ஏகமாயுள்ள ஒரே சக்தியின் இருமுனைகளாம்.

**மின்சாரமென்றால் என்ன?** பிராணசக்தி ஜாஸ்தியுள்ள ஒரு வஸ்து பிராணசக்தி குறைந்துள்ள ஒரு வஸ்துவை யடுத்து நிற்கும்போது, சதிரூபசக்தி "பள்ளத்தில் நீர் தங்கும் பான்மைபோல்" வலிய வஸ்துவிலிருந்து எளிய வஸ்துவைநோக்கிப் பாய்கிறது. இப்படிப் பாயுங்கால், எளியாரை வலியார் வெல்லுதல்போல், தனது வலிமிகுந்த சக்தியால், வலிகுறைந்த சக்தியுள்ள வஸ்துவைத் தன்னோடைக்கியமாகச் செய்துகொள்கிறது. இரண்டிலும் பொதுவாயுள்ள பிராணமயமான சக்தி ஒன்றுசேரும் பொழுது ஒருவித இயக்கம் தோன்றுகிறது. இந்த இயக்கம் அதிசூக்ஷ்மமானதால் ஸ்தூலமாகஅறியத்தக்கதல்ல. அவ்யக்தமாயிருந்து தனது ஆகர்ஷணசக்திக்குள்பட்ட ஸ்தூலமான பொருள்களைப் பாதிக்கும்தன்மையால், அதன் சக்தி வியக்தமாகிறது. இயக்கமயமான சக்திஸ்வரூபமே மின்னல். இந்த சக்தி ஆணும் பெண்ணும் சேருவதுபோல், பலா, அபலா, அல்லது வலிமை, எளிமையென்னும் இருதுருவமுனையின் வழியாகச் சேருவதால், இருவித சக்தியும் சேரும் தருணத்தில் சக்திக்குக் காரணமான பிந்து நுப வெளிச்சம் அல்லது பிரகாசம் தோன்றுகிறது. இது ஆகாசத்தில் மின்னலாகவும், மற்றப்படி யுண்டாகும் மின்சாரக் கூடல்களில் நெருப்புப்பொரி போல் தோன்றும் (Electric spark) மின்பொரி யாகவும் விளங்கும். இந்த மின்சக்தியின் சந்து அல்லது சாரம் எதுவோ அதுவே மின்சாரம் என்பது. இது பிராணசக்தியின் ஒரு அம்சம்.

**பிராணசக்தி.** உசுவாஸ நிசுவாஸக் காற்றுகள் சேருமிடத்தில் உண்டாகும் மின்சக்தி யொன்றுண்டு. இதுவே தேகத்திலுள்ள ஜாடராக்னிக்குக் காரணம். உசுவாஸ நிசுவாஸக் காற்றுகளிரண்டும் சாமான்யமாக சுவாஸாசயத்தில் சேருமென்றும், அவைசேருமிடத்தில் 'மின்சார ஓட்டம்' (பிராணநாடி) ஜனிக்கிற தென்றும் மேற்றிசை சாஸ்திரவிற்பன்னர் கண்டுபிடித்துவிட்டதாகச் சொல்கிறார்கள்.

ஆனால் உண்மையாகவே உசுவாஸ நிசுவாஸமிரண்டும் ஒன்றுசேருமிடம் நாபிஸ்தானத்துக்குக்கீழே மூலாதாரத்துக்கு மேலே பிராணபானவாயுக்கள் சேருமிடமென்று யோகசாஸ்திரப்படி நிச்சயமாய் நிதானித்திருக்கிறார்கள். அனுபவரீதியாகவும் இதை ஆராய்ந்தறிந்துகொள்ளலாம். இந்த மூலாக்னி தான் பிராணனுக்கு ஆதாரம். இதிலிருந்தே உதராக்னி யுண்டாகிறது. பசிதாகாதி தாபங்களும் ஜீரணாதி தொழில்களும் இந்தமூலாக்னி காரணமாகவே யுண்டாகின்றன. இதற்கெல்லாம் பொதுவாய் பிராணசக்தியென்று சொல்கிறது. பிராணசக்தி மின்சாரத்திலும் சூக்ஷ்மமானது. அதன்இயக்கத்தை யோகிகள் மனதைநிறுத்தி யறிவார்கள். பஹிர்முகத்தில் அதன் இயக்கத்தை யறிய அதிசூக்ஷ்மமான யந்திரங்களிருக்கலாம். ஆனாலும் உண்மையாய் உள்ளபடி பிராணசக்தியை பஹிர்முகத்திலிருந்தே யறிவது கஷ்டம். ஏனென்றால், கர்மேந்திரியங்களெல்லாமும், ஞானேந்திரியங்களும்கூட, ஒருவிதத்தில் பிராணசக்தியின் காரியங்களேயாம். காரணத்தின் ஸ்வரூபத்தைக் காரியத்தால் அனுமானிக்கலாமே யன்றி சாக்ஷாத்காரமா யறியமுடியாது. ஆனால் அந்தர்முகத்திலிருந்து அறிந்ததை ஒருவிதத்தில் பஹிர்முக சாதனங்களால் விளங்க

வைக்கலாம். உள்ளனுபவம் உதிக்கிறவரையில் இவை உண்மையறிவுக்கு சாதனங்களேயன்றி மற்றப்படி சாத்தியங்களாகமாட்டா. இந்த உண்மைகளையெல்லாம் மிஸ்டர் பெய்ன்ஸ் என்பவர் ஒரு விதமாக வெடுத்துக்காட்டி (The Herald of the Golden Age) என்னும் பத்திரிகைக்கு எழுதியிருக்கிறார். அப்பத்திராசிரியர் நமக்கு ஒருபத்திரிகை யனுப்பி அதைக்குறிப்பிட்டுவிளக்கக்கேட்டுக் கொண்டிருப்பதால், அதையும் ஒருவாறு சுருக்கமாகச் சொல்கிறோம்.

"கால்வானிக் பாட்டெரி" என்னும் மின்சாரமுண்டுபண்ணும் கருவியில், செம்பும் துத்திநாகமும் ஒன்றையடுத்தொன்றாக அடுக்கியிருக்கக் காணலாம். செம்பு வன்மையுடையதாகையால் அது 'Positive' என்று சொல்லும் ஆண்மூலை. துத்திநாகம் வன்மைக்குறைவானதால் அது 'Negative' என்று சொல்லும் பெண்மூலை. 'Positive-Negative' என்கிற மிதுன சக்திகள் இன்றி மின்சாரமில்லை.

வாயு-ஆண் சக்தி; பிருதிவி பெண்சக்தி.

பூமியல்லதுபிருதிவி எப்போதும் negative என்கிற பெண்சக்தி. ஆகையால் பூமியை பூதேவி யென்று வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அந்தரிக்ஷத்திலுள்ள வாயுவோ எப்போதும் ஆண்சக்தி. ஆகையால் அது வாயுபகவான் என்று வர்ணிக்கப்பட்டுள்ளது. மின்சக்தி வாசம் செய்யுமிடத்துக்கு "Storage cell" என்று சொல்கிறது. இந்தப் பெயர் செயற்கைக் கருவியிலிருந்து, இயற்கைப் பொருளைக் குறிக்கும் ஒரு நாமமாக எடுத்தாளப் பட்டிருக்கிறது. இதுவே பிராணதாரமான இடம். "பிராணசயம்" என்றே சொல்லலாம். இந்த ஆசயத்தில் பெண்சக்தி ஆண்சக்தி யிரண்டும் சேர்ந்திருக்கும். உபநிஷத் வாக்கியத்தில் சொல்ல வேண்டுமானால் சக்தி சக்திமான் ஆகிய இருவரும் இருக்குமிட மெதுவோ அதுவே பிராணசயம். இவ்விரண்டுக்கு முள்ள சம்பந்தம் அத்வைத சம்பந்த மென்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஆகாசத்திலுள்ள வாயுவின் ஒவ்வொரு அணுவின் மையமும் வாசனாரூபமான பிருதிவியம்சமென்று மேற்றிசையாரும் ஒப்புக்கொள்கிறார்கள். கந்த ஸ்வரூபமான பிருதிவியம்சத்தின் ஒவ்வொரு அணுவிலும் வாயு விருக்கிறதும் வாஸ்தவமே. மரம், செடி, கொடி, காய், கனி யெல்லாவற்றிலும் சக்தியும் சக்திமானும் சேர்ந்துள்ள பிராணசயம் ஒன்றிருக்கிறது. மரம், செடி, கொடிகள் பூமியிலிருந்து பிரிக்கப்பட்டபோதும், கனிகள் கொம்பிலிருந்து பிரிக்கப்பட்டபோதும் இந்தப்பிராணசயத்திலுள்ள சக்தி, சக்திமான் (அல்லது, Positive Negative என்னும் மிதுனசக்திகள்) இரண்டும் வேறு சம்பந்தமில்லாமல் பிரிக்கப்பட்டிருக்கிறது. அன்புள்ள தம்பதிகளிருவர் தங்கள் உள்ளன்பில் உலகசம்பந்தமின்றி, உலகத்தை லக்ஷியமும் செய்யாமல் ஒருவர் அன்பில் ஒருவர் மூழ்கி ஆனந்தமாய் வசித்து வருவதுபோல, செடி, கொடி, மரம், கனிகளிலுள்ள இந்த "insulated cell" என்னும் அந்நிய சம்பந்தமில்லாத பிராணசயமும் அதனுள்ளிருக்கும்ஆண்-பெண் கூட்டுறவுக்குப் பங்கமில்லாதமட்டும், அஃதுள்ள செடி, கொடி, மரம், கனி, வாடி வதங்கிச் சுருங்கிக் காய்ந்தாலும், சாகாமல் உயிரோடிருக்கிறது. மரம் வெட்டப்பட்டும் பலம் குன்றாதிருப்பது இதனால் தான். கட்டடங்களில் உபயோகிக்கும் மரங்களுக்கு வர்ணங்கள் அல்லது எண்ணெய்கள் பூசி அந்நியபூத சம்பந்தம் நேரிடாதபடி காப்பாற்றுவதால், அவை நீடித்திருப்பதற்குக் காரணமும் இதுவே.

செடிகள் வளரும் விதம்.

செடி, கொடி, மரங்கள் வளருவதற்குத்தண்ணீர் அவசியம். என்? தண்ணீரே அவற்றிற்கு ஆகாரம். அன்றி தண்ணீரினாலேயே பூமியிலுள்ள 'negative electricity' யென்னும் பெண்ரூப மின்சாரசக்தி விடுபட்டு வேர்களின் நுனியின் வழியாகவும் நாடி நரம்புகள் வழியாகவும் செடி கொடி மரங்களில் புகுந்து அவை வளருவதற்குக்காரணமாயிருக்கிறது. ஈரமில்லாவிட்டால்பூமியிலுள்ள பெண்ரூப மின்சாரசக்தி விடுபட்டு, அது மரத்திற்புகுந்து இலைகள் வழியாகக் காற்றிலிருந்து புகும் ஆண்ரூப மின்சக்தியோடு சேர்ந்து செடிகளுக்குப் பிராணதாரமாகமுடியஹேதுவில்லை. உலர்ந்த மண் பூசாரத்தை நடக்கவொட்டாமல் முடக்கிவிடுகிறது. அதனால்தான் மழையில்லாவிட்டால், பயிர்களெல்லாம் தாய்முகம் பாராக்குழந்தைபோல் வாடிப்போகின்றன. உண்மையாகவே மழை பொழிவதினாலுண்டாகும்ஈரமின்மையால்பூதேவியின்சாரம், பால்கட்டினதாயின் ஸ்தனத்தைப்போல், பயிர் பச்சைகளுக்குப் போஷணருகமற்றுப்போவதன்றி, பூமிக்குள் முடங்கிக்கிடந்து, தாய்க்குப் பால்சுரம் வருவதுபோல் பூமிக்கு ஒருவித உஷ்ணதாபத்தையுண்டுபண்ணி, பயிர் பச்சைகளெல்லாம் கருகிப்போகச்செய்கிறது.

மோட்டும் மலரும். மேற்கண்டபடி ஸ்ரீதாத்ரி நபமான பூதேவி பயிர் பச்சைகளுக்குத் தன் ஹிருதயத்திலிருந்து அன்னஸத்தை (பூசாரம் என்றாலும் பூமியின் மின்சாரம் என்றாலும் இந்த அன்னசத்தையே குறிக்கும்) க்கொடுக்க, அது மரத்தின் நாடி நரம்புகள் வழியாக ஓடி நிறைந்து பூர்ணமான பொழுது இலைகளின் நுனியில் நிறைந்து அரும்பு கட்டி மொட்டு ரூபமாக விளங்குகிறது. இதர இலைகள் வாயுசத்தையுண்டு பச்சென்று விளங்க, அரும்புகட்டிய மொட்மொத்திரம் பூசாரம் நிறைந்து, பெண் ரூப மின்சக்தியின் நிறைவால், பளபளவென்று, புருஷனைக்கண்டு நாணிநிற்கும் நாரியைப்போல், வாயுவிலுள்ள ஆண்சக்திக்கு நாணித் தலைகுனிந்து முகம் குவிந்து மொட்டு அவிழாது நிற்கிறது. வாயுவிலுள்ள ஆண்ரூப மின்சக்தி சேரச்சேர புருஷஸ்பர்சம் பட்ட பெண்மணி போல் உடம்புசிலிர்த்து உளம் பூரித்து மொட்டவிழ்ந்து முகமலர்ந்து புன்சிரிப்புத் தவழும் உதடுகளைப் போல் இதழ்கள் விரிந்து நிற்கும். ஸ்ரீ ஆசாரியஸ்வாமிகள் "முகையவிழப் பிறழுமுன தருணமுக கமலமென்றால்" என்று அம்பிகையின் முக கமலத்தை வர்ணித்திருப்பதற்கும், பூமியிலும் வாயுவிலுமுள்ள சக்தி, சக்திமான் ஆகிய இருவரும் சேருவதால் மொட்டவிழும் தத்துவத்தின் உண்மைத் தரிசனத்திற்குமுள்ள பொருத்தத்தை யுள்ளபடி ஆய்ந்தறிந்தால், மேற்றிசையார் பெருமிதமாகக் கொண்டாடும் சாஸ்திர உண்மைகளுக்கும் தேவதா உபாசனையிலுதிக்கும் நிதரிசனத்துக்கும் உள்ள பொருத்தம் நன்றாக விளங்கும். அகக்கண்ணில்லாதவர்களுக்குத்தத்துவோபதேசம் செய்தால், அது, குருடனுக்குப் பாலின் நிறத்தை விளக்க அது கொக்குப்போலிருக்குமென்றுசொன்ன ஸர்வ முட்டாள் சூக்ஷ்மபுத்தியை ஒத்ததாகும்.

சக்தியும் சக்திமானும் ரமித்தும் விதம். உலகிலுள்ள பயிர் பச்சைகளும் மரஞ் செடி கொடிகளும், மற்றவைகளும், அகக்கண் படைத்தவர்களுக்கு சக்தியும் சக்திமானும் இடையறாது கலந்து ரமிக்கும் திருமணவறைகளுக்கு (Insulated cells) ஒப்பாகும். எப்படியென்றால், மரத்தின் வேர்நுனிகள் வழியாகப் பெண்ரூபமின்சக்தியான பூசாரம் பிரவேசிக்க அது ஒரு வாசலாகவும், இலையின் நுனிப்பாகமான மொட்டும் மலரும் ஆண்ரூப மின்சக்தி யான வாயுவிலுள்ள சக்திமான் பிரவேசிப்பதற்கான வாசலாகவும், இரண்டிற்கும் இடையேயுள்ள தோலும் பட்டையும் போன்ற போர்வை (insulator) வேறெதுவும் பிரவேசிக்காதபடி தடுப்பதற்கான சுவர்போலவுமாக ஒவ்வொரு செடிமரமும் ஸ்ரீயும் ஸ்ரீமானும் சேர்ந்து சுகிப்பதற்கான மணவறைபோல் சிங்காரம் பொருந்தி விளங்குகிறது. மரத்தின் அடியைக் கெல்லித்தண்ணீர்விடுவது கூடாதென்றும் கெடுதல் விளைக்கக் காரணமாகுமென்றும், மிஸ்டர் ஸிாப்ப்ஸன் சொல்லியதனுண்மை இப்பொழுது நன்றாக விளங்குகிறதல்லவா! அடிமரத்தைக் கெல்லித் தண்ணீர் வார்த்து வந்தால், மணவறையில் புகுந்து பார்க்கும் விஷமக்காரர்களைப் போல அந்த ஜலம் அந்நியவஸ்துக்கள் புகுவதற்கு இடங்கொடுக்காதபடி இயற்கையாயமர்ந்துள்ள (Insulator) பட்டையை ஊரிப்போகச் செய்து அதன் வழியாக உள்ளே பிரவேசிக்க, புதுமணம்செய்த தம்பதிகள் ரமிக்கும் திருமணவறையில் கன்னம் வைத்து கள்வர் புகுந்ததுபோல, சக்தியும் சக்திமானும் கூடியூடி ரமித்துவரும் ரமிப்புக்குப் பங்கமுண்டாக அதனால் பிராணதாரத்துக்குச் சேதமுண்டாக, அது காரணத்தால் மரம் செடிகள் வளமைகுன்றி வியாதிகண்டு கெட்டுப்போகிறது.

கூடல், ஊடல். சக்தியும் சக்திமானும் "கூடி யூடி" ச்சுகித்து வருவதற்குப் பங்கம் உண்டாகுமென்று சொன்னோம். இந்தக் கூடல் ஊடல் பிரகிருதிவிர்த்திக்கு அவசியமாம்! ஊடலின்றிக் கூடினால், சக்தி சக்திமானில் ஒடுங்க, எல்லாம் பிரம்மமயமாம். கூடல் கண்டவுடன் ஊடினாலும் ஊடல் கண்டவுடன் கூடினாலும், சக்தி சக்திமான் இருவருக்கும் விருத்தியுண்டு. சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரகாரியங்கள் இப்படியே நடக்கின்றன. பிரவிர்த்திரூப சக்திவிர்த்திக்கு "Anabolism" என்றும், நிவிர்த்திரூப ஸம்ஹார சக்தியான "சக்திமான் விர்த்திக்கு" "Katabolism" என்றும் சொல்கிறார்கள். இவை மேற்றிசை சாஸ்திரவிற்பன்னர் நூதனமாகக் கண்டுபிடித்துள்ள உண்மைகள்.

"Insulator" "பிரிவினை". கூடல் ஊடல் எப்போதுசாத்தியமென்றால் சக்திக்கும் சக்திமானுக்கும் இடையே அவர்களைப் பிரிக்கும் திரையொன்று இருக்க வேண்டும். ஸ்தூலபாவனையில் இதை "insulator" "பிரிவினைரூபம்" என்று சொல்வார்கள்.

இது சூக்ஷ்மத்தில் அந்தரங்கமாய் மனதிலுதிக்கும் "பேதபாவனை" யென்னப்படும். சூக்ஷ்மாதி சூக்ஷ்மமான காரணத்தில் இது வியஷ்டிரூபத்தில் அவித்தையென்றும் சமஷ்டிரூபத்தில் மாயையென்றும் சொல்லப்படும். இதை யோகாப்பியாச முதிர்ச்சியில் அந்தர்முகத்தில் கண்டதுபோல் பஹிர்முகத்திலும் கண்டவர்கள் தத்வதரிசிகள் என்னப்படுவார்கள். அவர்களை இவை பாதிக்காவாம்.

**உமாமகேசுவரர் உண்மைப் போதம்**

பிரிவினையற்றால் பேதமுமற்றது. பேதமற்ற விடத்தில் பிரவிர்த்தியில்லை. பிரவிர்த்தி யின்மையாவது சிருஷ்டிகாரியம் நின்று போதலாம். ஈசுவரன், சனகாதி நால்வருக்கும் உபதேசம் செய்து கொண்டிருக்கையில், சிருஷ்டிகாரியம் நின்றுபோயிற்று. பிரம்மாவானவர் திடீரென்று தன் சிருஷ்டித் தொழிலைச்செய்யச் சக்திவற்றவராக, அதற்குக காரணம் தெரியாது மயங்கி விஷ்ணுவிடம்போய் முறையிட, அவர் தன்னாலொன்றுமாகாதென்று சொல்லி, ருத்திரனிடம் அனுப்ப, அவரும் தன்னாலாகாதென்று மஹேசுவரனிடம் அனுப்ப, அவர் பரமசிவனலன்றி வேறு யாராலும் இதற்குப் பரிகாரம் செய்ய சாத்தியமில்லை யென்றார். பிரம்மா பரமசிவனைப்போய்ப் பணிய, அவர் உமை தன்னோடு ஐக்யமாயிருப்பதைக்கண்டு, அவளைமறுபடியும் தன்னிலிருந்துண்டாகச் செய்து பக்கத்திலுட்காரவைத்துக் கொண்டு, பிரமாவைப் பார்த்து இந்த ரூபத்தில் எங்களைப் பணிந்து நினைத்து உன் சிருஷ்டித்தொழிலைச் செய், உனக்கு சிருஷ்டிசக்தியுண்டாகுமென்றனுக்ரகித்து அனுப்பினார். சக்தியும்சக்திமானும் பிரிவினையின்றியிருந்தால் பிரவிர்த்தியில்லை. "பிரிவினை" தரித்திருக்கின் பிரவிர்த்திக்கிடமுண்டு. "பிரிவினை"யென்றால் பிரிந்தவர்கூடில் பிரிவற்றுப் போகாதிருத்தல், அதாவது பேதமிருத்தல். அதாவது, பேதபாவனை நசிக்காமலிருந்தால் அதுவேபிரிவினை. Insulator என்றால்பிரிவினை யுண்டுபண்ணுவது. ஆணோடு பெண் சேருங்கால் ஒன்னி லொன்று அடங்குதல் இயல்பாம். ஆணில் பெண்ணடங்கில் நிவிர்த்தியும், பெண்ணில் ஆண்டங்கில் பிரவிர்த்தியுமாம். இப்படி ஒன்றில் ஒன்று அடங்கிய விடத்தும் ஒடுங்காத் தன்மை எதனாலுண்டாகிறதோ அதற்கு "insnlator" பிரிவினை உண்டு பண்ணுவது" என்று பேர். கூட்டுவிப்பதற்கு "conductor" "நாடிமூலம்" என்றும், பிரிப்பதற்கு "insulator" "பிரிவினை" யென்றும் சொல்லப்படுகிறது. உண்மையில் பார்க்கில் "பிரியாமற் பிரிந்திருத்தலாம் தன்மை யெதுவோ அதுவே "பிரிவினை"த் தத்துவமாம். இதனுண்மையை "ஊடலுவகை" யென்னும் திருக்குறள் அதிகாரத்தில் பரக்கக்காணலாம். மின்சார விஷயமாய் ஸ்தூலமாகப் பார்க்கில் உலோகங்கள் கூட்டிவைப்பனவாம் "நாடிமூலங்கள்" என்று சொல்லப்படும். பீங்கான், சட்டி, ஓடு, அபரேக்கு(mica)முதலியவை பிரிவினையுண்டுபண்ணு மவைகளாம் (Insulators). பழத்தின் வித்தின்சத்தில் இருப்பது பெண் சக்தியும், வித்தின் ஓடு அதைப் பிரியாமற் பிரிக்கும் insulator-ம் ஆகும். பழத்தின் சத்துள்ள ரஸத்தில் ஆண்சக்தியும், அதன் மேல்தோல் அதைப்பிரிக்கும் insultor ஆகவும் இருக்கிறது.

தோலுள்ள வரையில் பழம் கெடாது. "மல்கோவா' என்று சொல்லும் மாம்பழங்கள் இதற்கு உதாரணமாம். ஓடுள்ள வரையில் வித்துக் கெடாது. ஓடு போனால் முளைக்கும்சக்தி போய்விடும். "பண்டு முளைப்பது அரிசியே யானாலும் விண்டுமிபோனால் முளையாதாம்."—என்பது இதற்கு இசைந்ததோர் மேற்கோள்.

**மிஸ்டர் பேய்ன்ஸ் முடிவுகட்டல்**

மிஸ்டர் பேய்ன்ஸ் இவ்வளவையும் எடுத்துச்சொன்னது என்னத்திற்காக வென்றால்: பழவர்க்கங்களிலும், தானியங்களிலும் பிராணசக்தி (storage of electricity) அதிகமாய் நிரம்பியிருக்கிறது. மாமிசத்தில் அவ்விதசக்தியில்லையால், மாமிசபோஜனம் மனிதனுக்கு ஏற்றதோர் உணவன்று. பழவர்க்கங்களும் தானியங்கள் முதலான மூலவர்க்கங்களுமே மனிதனுக்கியல்பா யேற்றதோர் உணவு என்பதை ஸ்தாபிக்கவாம். நவீனநாகரிக புஞ்சங்கள மாமிச உணவைத் தேடியலைய, மேற்றிசையார் அதைவிட்டு மூலவர்க்கங்களுக்குத் திரும்பயத்தனிக்கிறார்கள். மேற்றிசையார் பூர்வ ஆரியர்களான இத்தேசத்தாரை கத்தி துப்பாக்கிகளாலும், சண்டை சைனியங்களாலும் வென்றுவிடுவோர்களென்கிற பயம் அவ்வளவாகவில்லை. ஆரியர்கள் வரவர அனாரியர்களாகிவர, மேற்றிசையார் உத்தமோத்தமமானதும் ஆத்மசக்தி புண்டுபண்ணுவதுமான ஆர்யாசாரங்களைச் சிறுகச்சிறுக அனுசரித்து ஆத்மவழியில் சென்று நம்மவர்களை அவ்வழியில் தானே ஜயித்துவிடுவோர்கள் போலிருக்கிறது! அப்படியவர்கள் செய்வார்களானால், அனாரியர்களாய், ஆரியபுத்திரர்கள் என்னும் பேருக்கு அநருகரான இத்தேசத்தார் அவர்களுக்குத் தொண்டு செய்து ஜீவிக்க ஏற்றவர்களே யாவார். நமது ஆர்ய மதமும் ஆர்யாசாரமும் அனுஷ்டானத்திலிருக்கும் வரையில் நமக்கு பயமில்லையென்பது திண்ணம்.

**பிராணசக்தியும் மின்சாரமும்.**

"பிராணசக்தியே மின்சாரம்" என்று மேற்றிசையார் கொண்டாடுகிறார்கள்.

மின்சாரமே பிராணசக்தியானாலும், இரண்டிற்கும் உண்மையில் வித்தியாச மிருக்கிறது. மின்சாரமென்பது அன்னமய கோசத்தைச் சேர்ந்ததோர் சூக்ஷ்மசக்தி. பிராணசக்தி பிராணமய கோசமுந்தாண்டி யுள்ளதோர் மனோசக்தி. இரண்டுக்குமுள்ள பேதம் தேவர்க்கும் அசுரர்க்குமுள்ள பேதத்தை யொக்கும். மின்சாரம் ஜடசக்தியைச் சேர்ந்தது. பிராணசக்தியோ சித்சக்தியின் அம்சம்.

ஓம்தத்ஸத்.